குமரன்

ஆரம் 5, முத்து 31

March 15, 1928

Record no. 313

*Kumaraṉ*

*Āram 5, muttu 31*

*March 15, 1928*

Record no. 313

சிவமயம்.




"என்கடன் பணிசெய்து கிடப்பதே."

(வாரப் பதிப்பு.)

வியாழன் தோறும் வெளியிடப் பெறுவது.

"சுதரே உயிர்."   "கருணையே தெய்வம்."

ஆரம் ரு. } காரைக்குடி பிரபவ - ஞு பங்குனி - மீ ௩ - உ (15—3—28) { முச்

[ சென்றவாரத் தொடர்ச்சி. ]

தூதுவர் இருவகைப்படுவேர் என்றும், தம் அரசர் சொல்லிய மாற்றத்தை ஏற்று, அவ்வாறே மாற்றரசரிடம் சொல்வோர் ஒரு வகையார் என்றும், அவ்வாறன்றித் தம் அரசர் மொழிந்த மாற்றத்தைத் தொகுத்தும், வகுத்தும், விரித்தும், மாற்றரசர் மனங்கொள்ள உரைக்கும் மதிநலம் வாய்ந்தோர் மற்றொரு வகையார் என்றும் தமிழ்மறை கூறுகின்றது. இவ்விருவகைத் தூதுவரில் தாம் வகுத்துக் கூறும் மதிநலம் வாய்ந்தவரே தலையாய தூதுவர் என்பது சொல்லாமலே அமையும். இம்முறையில், அங்கதன் தன் மதிநலத்தாலும், சொல் நயத்தாலும், தலைவன் சொல்லிய செய்தியை விரித்துரைக்கும் முறை அறிந்து போற்றுதற்குரியதாகும். கடல் சூழ்ந்த இலங்கைமாநகரில் அமைந்து போர்புரியக் கருதிய இராவணனை, எள்ளனஞ் செய்து போர்க்களத்துக்கு இழுக்குமாறு அங்கதன் சொல்லுஞ் சொற்கள் அழகுவாய்ந்த நய மொழிகளாய் விளங்குகின்றன. இருபது தோள் வலியால் இறுமாந்திருந்த இலங்கை வேந்தனை நோக்கி, "ஐய! உன் பாட்டியாய தாடகையைப் பருந்துக்கு விருந்தாக்கக் கண்டும், மருந்தினுமினிய உன் மாமனை மாரீசன் மடியக்கண்டும், கானகத்தில் உன் தங்கையை மூக்கரிந்து மானபங்கஞ் செய்யக் கண்டும், கரன் முதலாய தம்பியரை வேரோடு களையக் கண்டும், போர் செய்ய வந்திலாத நீ இனிச் செய்யும் போருமுண்டோ? இன்னும் கருங்கடல் கடந்து சிறையிருந்த சீதையைக்கண்டு, பஞ்ச சேனாபதியரையும் பஞ்சுபோலெரித்து, உன் அருமை மைந்தனை அக்கனையும் அரைசாந்துபோல் தரையில் தேய்த்து, இலங்காபுரியை தீயினுக் கிரையாக்கி உன் கண்ணெதிரே மீண்டும் கடலைத் தாவிய அனுமன் பின்னே போர்செய்ய வந்திலாதான் இனிச் செய்யும் ஆண்மையுண்டோ? இன்னும், நயந்த மங்கையரும் நகைக்குமாறு உனது மணிமுடியைப் பறித்து மானபங்கஞ் செய்த வானர மன்னன் பின்னே போர் செய்ய வந்திலாத நீ, இனிப் போரும்பான்மை யுண்டோ? நீரிலும், நெருப்பிலும், பாரிலும், வானப்பரப்பிலும் வாழும் உயிர்களெல்லாம் போரிலே தோற்றழியுமாறு வாழ்ந்த நீ, உன் கோட்டையினுள்ளே ஒதுங்கிப் பதுங்கி யொளித்தாயென்றால், உலகமுள்ளளவும் அழியாப் பழியாகும். ஆதலால் "தேவியைவிட்டு உயிர்வாழ விரும்புகின்றாயோ? அன்றி அமர்க்களத்தில் ஆவியைவிட்டு அழிந்தொழிய விரும்புகின்றாயோ?" என்று அங்கதன் கூறும் மொழிகள், வீரமும், நயமும் செறிந்த சொற்களாய் விளங்கக் காணலாம். ஆகவே, "அன்பறிவு ஆராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்கின்றியமையாத மூன்று" என்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் உரைத்த அருங்குணங் மூன்றும் அங்கதன்பால் அமைந்திருப்பது அறிந்து போற்றுதற்குரியதாகும்.

*   *

# அங்கதன் பெருமை.

திருவாளர் ரா. பி. சேதுப்பிள்ளை பி. ஏ., பி. எல்.



அங்கதன் ஆண்மையிலும், வீரத்திலும் அவ்வாறே முதன்மை பெற்று விளங்கச் சான்றின்றேம். [illegible] ஆண்மையையும் நன்கறிந்த இராமன் சீதையைத் தேடுமாறு நாற்றிசையும் மன்னரை அனுப்பும் முறையில் இலங்கைநாதன் வாழ்ந்த தென்றிசையைத் தேடும் தொழிலை அங்கதன்பால் ஒப்புவித்தான். அப்பணியைத் தலைமேற்கொண்ட அங்கதன்; அநுமனையும், நீலன், சாம்பன் முதலிய வானர வீரரையும் துணைக்கொண்டு தென்றிசை சென்றான். இதனை மாருதியின் வாயிலாக,

"அன்னவர்க் கடிமை செய்வேன்
நாமமு மனுமனென்பேன்
நன்னுதல் தன்னைத் தேடி
நாற்பெருந் திசையும் போந்த
மன்னரில் தென்பால் வந்த
தானைக்கு மன்னன் வாலி
தன் மகன் அவன்தன் தூதன்
வந்தனன் தனியே யென்றான்"

என்று கம்பர் பெருமான் இனிதெடுத்துரைத்தார்.

*   *   *

இன்னும், இராமனும் சேனையும் இலங்கைமா நகரை எளிதாக எய்துமாறு அளப்பரிய கடலில் அணைகட்டுவது அவசியமாயிற்று, அவ்வரும்பணியை வலிமைசான்ற வானர வீரரே செய்து முடிப்பதாக ஏற்றுக்கொண்டார்கள். அகன்று உயர்ந்த மலைகளைத் தோள்களிற்றாங்கியும், தாள்களாலுருட்டியும், தலையிற் சுமந்தும், வாலாலிழுத்தும் வலிய வானரங்கள் அருங்கடலைத் தடுத்து அணையமைக்கத் தொடங்கின. வானரத் தலைவர்களாய அநுமனும், குமுதனும், நீலனும் எளிதாக மலைகளைப் பெயர்த்துக் கடலிடை வீசி எறிந்தார்கள். அவ்வாறே அங்கதனும் வலிய மலைகளைப் பெயர்த்து ஆழியிலெறிந்து அக்கடல் நீரைக் கலக்கிய தன்மையை,

"இலக்குவன் சராமாயினும ஏன்றெதிர்
விலக்கினும் விலங்காத விலங்கலால்
அலக்கணெய்தி அமுதெழவாழியைக்
கலக்கினான் மகன் மீளக் கலக்கினான்"

என்று கவி கூறும் அழகு அறிந்து போற்றுதற்குரியதாகும்.

*   *   *

ஆண்மையில் தலைசிறந்த உண்மை வீரன் பிறரிடம் விளங்கும் வீரம் கண்டு வியந்து புகழ்வான். மாற்றாரது வீரத்தைக் கண்டு அழுக்காறுகொண்டு அழிந்து, வைவது போலி வீரனது புன்மையாகும். வாலியின் வலிமையைத் தன் கண்களால் கண்ட இராமன் அவனது வீரத்தை வியந்து இலக்குவனிடம் வாயாரப் புகழ்ந்தான் என்று வாலியின் வரலாறு கூறுகின்றது. அவ்வாறே இலங்கைமாநகரில் வீரமாதின் நிலயமாய் இலங்கிய இராவணனைக்கண்டபோது அங்கதன் அவன் வலிமையை வியந்து வாயாரப் புகழ்ந்து போற்றினான்.

"கல்லுண்டு மரமுண்டு ஏழைக்
கடலொன்றும் கடந்தே மென்னும்
சொல்லுண்டே இவனை வெல்லத்
தோற்றத்தோர் கூற்றமுண்டே
எல்லுண்ட படைகைக் கொண்டான்
எதிருண்டே இராமன் கையில்
வில்லுண்டே யுண்டேன் றெண்ணி
யாற்றவும் வியந்து நின்றான்"

*   *   *

இவ்வாறு வியந்து நின்றபோது அவ்வீரனை வாலினால் வென்ற தன் தந்தையின் வலிமையை நினைந்தான். இலங்கை வேந்தனது வலிமையை அழித்தற்கு வாலி இல்லாது போயினனே என்று ஏங்கி வருந்தினான். வாலி இறந்தானாயினும், அவனை வென்ற இராம பாணம் இன்னும் இருக்கின்றது, என்று எண்ணி ஒருவாறு மனம் தேறினான்.

"இன்றிவன் தன்னை வெய்த
நோக்கினேற் கெதிர்க்,
வென்றவென் தாதை மார்பில்
வில்லின்மேற் கணையோடு
கொன்றவன் தானே வந்தான்
யென்றுடன் குறிப்பினல்லால்
ஒன்றிவன் தன்னை வெல்ல
வல்லரோ உயிர்க்கு நல்லார்

என்று அங்கதன் கூறும் மொழிகள் ஆண்மைக்கு அழியாச் சான்று பகர்கின்ற இத்தகைய வீரனான இராவணனது செயில் திகழ்ந்த மணிமுடி பறித்து மானஞ் செய்து விண்ணிலே விரைந்தெழுந்த தந்தையின் வலிமையை [illegible] தாய்.

"பணிபதித் தெழுந்த மா
கலுழனி னிவனைப்பற்,
மணிபறித் தெழுந்த வெந்தை
யாரினும் வலிய னென்றான்

இவ்வாறு இராவணனது வலிமை உள்ளவாறுணர்ந்து அவ்வரக்கனை போற்றிய மனப்பான்மை அங்கதனது மையான வீரவாழ்க்கைக்கு ஒப்பதாகும்.

*   *

இன்னும் ஆண்மை நிறைந்த [illegible] ருடன் அறப்போர் செய்ய [illegible] மறப்போரை மனத்திலும் [illegible] இலங்கைவேந்தனிடம் தூது சென்ற தன், அரக்கனது மனநிலையைக் அமரே நேரும் என்று அறிந்தபோது அ மக்களை நோக்கி, "இன்னும் சில [illegible] இராமபாணம் இங்கு விழுந்து யாவ[illegible] அழித் தொழிக்கும்; ஆதலால், அவ் அம்பு வீழ்வதன் முன்னமே, முதியோ இளையோரும், பாவையரும், பாலரும், [illegible]றைய மெல்லியரும் இந்நகரைவிட்டுப் போமின், போமின்' என்று இலங் புர வாயிலினின்று கூவினான்,

"ஏமஞ்சார எளியவர் யாவிரும்
தமக் கால்வன வீரன் சுசேரம்
வேமின் போல்வன வீழ்வதன் முன்ன
போமின் போமின் புறத்தென்றுபோ

என்று அங்கதனது அருள்நிறைந்[illegible] மையை கம்பர் பெருமான் போ[illegible] தார்.

*   *

வில்லாலும் படை[illegible]
[illegible] பயனற்ற
உரையார் என்[illegible]
தலை சிறந்[illegible]
இவ்வீரம்
யாயின[illegible]
கண்[illegible]



ஆராய்ச்[illegible]

# திரு. வ. உ. சிதம்பரம்பிள்ளை.

## காரைக்குடியில் சொற்பொழிவு.

...க்குடி சாந்தி சதுக்கத்தில் மாசிமீ ...மாலையில் ...த்துக்குடி திருவாளர் ...சிதம்பரம் பிள்ளை அவர்கள் நிகழ்த்... ...ற்பொழிவின் சாரம் வருமாறு :—

...ர்களே! சகோதரிகளே!

...ள் என்னைப்பற்றி மிகப்புகழ்ந்து கூறி ...ர்கள். அதற்காக நமஸ்காரம். இ... ...ம் ஒருதரம் சுற்றினேன். டிசம் ...ததில் சென்னையில் நடைபெற்ற ...ற்குச் சென்றிருந்தேன். அங்கு வ... பலமான தேசாபிமானிகளையும் ...ி அவர்கள் செய்துள்ள வேலை ...கொண்டேன். நீங்கள் இ... ...ள்ள வேலைகளை நேரிற் ...ன், மக்கள் பலன்தரத்தக்க வேலை செய்கிறீர்கள். கடவுள் பூரண கிரு... ...வத்திருக்கிறார். நமது தேசத்தவர் ...ல் முன்னேற்ற மடைவார்கள் என் ...மில்லை.

...தேசத்தில் பலர் பொய்யான காரி... ...நம்பிக்கை கொண்டு மயங்கி ... பணங்களைச் செலவழிக்கின்ற ...து அவசியமான காரியங்களுக்கு ...ன பணம் தேவையிருக்கிறது. ...ன காரியங்களில் பெரும் பணம் ...செய்யப்படுவதை எண்ணும் ...து வருத்தம் உண்டாகிறது. கடவுள் ...யால் நமக்கு ஒரு உணர்ச்சி தோன் ...க்கிறது. பொய்யான காரியங்களில் ...ு செய்யப்படும் பணத்தை நிறுத்த ...ி செய்கிறோம். அப்பணம் நம் ...திலுள்ள எல்லாச் சாதியாருக்கும் படுகிறதென்றாலும் பாதகமில்லை. குறிப் ...வகுப்பார்கட்கே பணம் போய்ச் ...கிறது. இதை நான் கூறுவதனால் இது ...லாபமடைந்து வந்தவர்களுக்கு என் ...த்தம் உண்டாகலாம். நீங்கள் ...ந்து அதன்படி செய்யுங்கள். ...நம்மவர் திதி கொடுத்தல் ...ழக்கத்தைக் கையாண்டுவருகின் ...வ்வாறு செய்யவேண்டுமென்று நம் நூல்களில் காணப்படவில்லை. நம் ...த்தில் முக்கிய தத்துவம் ஒன்றுண்டு. ...ன்னவென்றால் "அவனவன் செய்த ...வனவனைச் சாரும்" என்பதாகும். ...லா மதங்களிலும் உள்ள கோட் ...ருவன் நல்வினை செய்வானாயல் ... என்னும் பேரால் அவ ...மையைச் செய்கிறது. தீவினை ...ஞல், தீவினை என்னும் பேரால் ...க்குத் தீமையை விளைவிக்கிறது. இது ...மது வேதத்திலுள்ள தத்துவம் ...பாடு. இதுவே எல்லா மதங்கட்கும் ...ஆசிரியர்கட்கும் ஏற்ற கோட்பாடு. ...ல் அது தற்காலத்தில் மாறாக இருக் ...றது. நமது பிதிர்க்கள் சூட்சும சரீரத் ...டு எமலோகத்திற் கடுத்த பிதிர்லோ ...கிலிருந்து அவர்கள் செய்த பாவத்திற் ...டத்தை அனுபவித்துக் கொண் ...கவும், அவர்கள் அனுபவிக்கும் ...தைப் போக்குவதற்காக பிதிர்க்கள் ...ளன்று சிரார்த்தம் செய்தல் என் ...ரால் பல தானங்களும், வெள்ளி, ...ஆகியவற்றில் பாத்திரங்களும், அரிசி ...வகையாவும் குறிப்பிட்ட சமூகத் ... கொடுத்தல் அவசியமெனவும் ...ற செய்துவருகிறோம். அவ்வாறு செய்தால் நமது பிதிர்க்கள் ஒருபடி ஏறிச் சுவர்க்க வாயிலை அடையக்கூடுமென நம்புகிறோம். அவ்வாறு பிள்ளைகள் செய்யும் தர்மத்தால் தந்தை தான் செய்த பாவத்தி னின்றும் மீள்வது உண்மையானால், நமது தத்துவமான "அவனவன் செய்த வினை அவனவனைச் சாரும்" என்ற கோட்பாடு பொய்யாகப் போகிறதன்றோ? ஒருவன் செய்த குற்றத்திற்காக அவனைச் சார்ந்தார் மன்னிப்புக் கேட்டுக்கொண்டால் கோர்ட் டில் விட்டு விடுவார்களா? அவ்வாறு உண்மை நீதிபதி ஒருவனும்விடமாட்டான். லஞ்சம் வாங்கும் இயல்புடைய ஒருவனே அதற்கு ஒருப்படுவான். குற்றம் செய்தவன் அக்குற்றத்திற்குரிய தண்டனையை அனுப வித்தே தீரவேண்டும். கருணை காட்டுவ தென்பது எளியோரிடமன்றிக் குற்றஞ்செய் தவனிடமன்று. குற்றஞ் செய்தவர்களை மன்னித்துக்கொண்டே யிருந்தால் உலகம் ஒழுங்காக நடைபெறாது. எமதர்மன் எப் பொழுதும் தண்டனையே விதித்துக்கொண் டிருக்கிறான். ஆனால் அவனுக்கு 'தர்மன்' என்று பெயர் கொடுக்கப்பட்டிருக்கிறது. அதற்குக் காரணமென்னை? பாரபட்சமின் றிக் குற்றம் செய்தவர்களைத் தண்டிப்பத னலன்றோ? குற்றம் செய்தவர்களை மன் னித்துக்கொண்டே யிருந்தால் அதில் நியாய தத்துவமில்லை. இறந்தவர் பெயரால் மூட நம்பிக்கையால் பிராமணருக்கோ, சைவருக்கோ, யாருக்கேனும் பணங்களைக் கொடுக்க வேண்டாமென்றே நான் கூறுகி றேன். இவ்வாறு நான்கூறுவதனால் என்னை நாஸ்திகனென்று சிலர் கூறலாம். இது நாஸ்திகமன்று. பிறரால் ஏமாற்றிப் பறிக் கப்படும் பொருளைக் காப்பாற்றவேண்டும் என்றே நான் சொல்லுகிறேன்.

திருவள்ளுவர் ஓர் கவி. ஒப்பற்ற அறிஞர். நானும் அவரைக் கடவுள் என்றே போற்று கிறேன். அவர் நூலில் வாளென்றும், வில் லென்றும், வேல் என்றும் இருக்கிறதே யன்றித் துப்பாக்கியென்றாவது பீரங்கிஎன் றாவது இல்லை. இப்பொழுது யுத்தத்திற்கு சாதனங்களாகத் துப்பாக்கியும் பீரங்கியுமே இருக்கின்றன. யுத்தத்திற்குச் செல்லவேண் டிய அவசியம் நேரிடின் என் செய்வது? "வள்ளுவர் துப்பாக்கியைப்பற்றியும் பீரங் கியைப் பற்றியும் ஒன்றும் சொல்லவில்லை. எனவே அச்சாதனங்களைக்கொண்டு போர் புரியமாட்டேன். வள்ளுவருக் கென்ன புத்தி யில்லையா? அவரைக்காட்டிலும் நாம் என்ன மேதாவிகளாகிவிட்டோம்" என்று இப்பொழுது ஒருவன் கூறிக்கொண்டிருப் பானானால் அது எவ்வளவு மூடத்தனமென் பதை நீங்களே யோசித்துப் பாருங்கள்.

"தென் புலத்தார் கடன் ஓம்புதல்" என் பதற்கு "பிதுர்க் கடன் செய்தல்" என்றே பொருள் வைத்துக்கொள்வோம். அப் பொழுதும் குறிப்பிட்ட வகுப்பாருக்கு வெள்ளி லோட்டா, தங்கத் தட்டு ஆகிய வைகள் கொடுக்க வேண்டுமென்று காண வில்லையே! பிதுர்க் கடன் செய்தல் என் றால் பிதுர்க்களை ஓம்புதல் என்பதே பொருள். பிதுர்க்களை ஓம்புதற்குப் பல வழிகளுண்டு. பிள்ளைகளுக்குப் பிதுர்க்கள் பெயர்களை இடலாம். அவர்கள் பெயரால் பள்ளிக்கூடங்கள், சத்திரங்கள், வைத்திய சாலை ஆகியவைகள் ஏற்படுத்தலாம். ஆனால் அதனால் கிடைக்கும் புண்ணியம் செய்தவ னைச் சாருமேயன்றிப் பிதுர்க்களைச்சாராது. ...ந்தை தாய் இறந்துபோனால் பிணத் ...டுவிட்டு ...களுக்குச் சாப்பாடு ...

அது எங்களப்பனுக்குப் போகாது. நாங்கள் இப்பொழுது விழித்துக் கொண் டோம். இனி ஏமாற்ற முடியாது" என்று கூறிவிடுங்கள். கொசு யானையை விழுங்கி விட்டது என்று சொன்னால் இதை நம்ப முடியுமா?

பிராமணரும் சைவரும் ஆடு வெட்டுவது நியாயமா வெனக் கேட்கிறேன். எங்களூ ரில் ஒரு அம்மன் இருக்கிறது. அதற்குப் பலர் ஆடு வெட்டுவதுண்டு. ஏனையா இம் மாதிரி செய்கிறீர்க ளென்று கேட்டால் வழக்கம் என்று கூறுகிறார்கள். ஒருவர் என் னைப் பார்த்து "ஆடு வெட்டக்கூடாது என்று கூறுகிறீர்களே, உங்கள் தகப்பனார் இங்கு வருவார்கள். ஆடு வெட்டுகிற பொழுது நிற்பார்கள். உடம்பைக்கூட மெதுவாக அசைப்பார்கள். நீங்கள் இவ்வா றிருக்கிறீர்களே" என்க் கேட்டார். பாவ மெனத்தெரியும் காரியத்தைத் தகப்பனார் செய்தாலும் நிறுத்த வேண்டுவது நமது கடமை.

ஐந்துவயதுப் பெண்ணுக்கும், ஆறுவயது ஆணுக்கும் கலியாணம் செய்கிறார்கள். இதனைப் பொம்மைக் கல்யாணம் என்றே சொல்லவேண்டும். இதனால் விதவைகள் பெருகிவிட்டனர். வடநாட்டில் ஒருவயது விதவை, இரண்டுவயது விதவைகள் ஏராள மாக இருக்கின்றனர். பால்ய விவாகத்தினால் பிறக்கும் பிள்ளைகளும் ஆரோக்கியமாக இருக்கவில்லை. அப்பிள்ளைகளால் குடும்பத் திற்கும், தேசத்திற்கும் தீங்கே உண்டாகும். நண்பர் தியாகராஜன் செட்டியார் மனைவி யுடன் பர்மாவிற்குச் சென்று வந்திருக்கிறார். இதற்காக அவரை ஜாதியை விட்டு விலக்க வேண்டுமென்று சில இடங்களில் கூறப்படுகிறதாம். இது எவ்வளவு அறி யாமை. மனைவியுடன் கப்பலேறிச் சென்ற தற்காக ஒருவகுப்பாருக்கு இரண்டாயிரம், மூவாயிரம் கொடுத்துப் பிராயச் சித்தம் செய்து கொள்வதா? எங்கள் ஜாதியில் இம் மாதிரியான வழக்கம் உண்டு. நான் கப்பல் கம்பெனிவைத்திருந்தபொழுது ஆறுமாதம் மனைவியுடன் கொழும்பிலிருந்தேன். பிரா மணர்கள் கொழும்பிலிருக்கிறார்கள், ரங் கூனி லிருக்கிறார்கள். ஆனால் அவர்கட்குப் பிராயச்சித்தமில்லை. கொன்வினை கொடுப் பினை கூட நடைபெறுகிறது. பிராயச்சித்த மெல்லாம் நமக்குத்தான். அவர்களுக்கு வந்துவிட்டால் "வேதப்பிராமண மிருக் கிறது. அந்த நாயனார் அப்படிச் சொல்லி யிருக்கிறார், இந்த நாயனார் இப்படிச்சொல்லி யிருக்கிறார்" என்று கூறிவிடுவார்கள்.

பிறப்பினால் உயர்வு தாழ்வில்லை. ஒழுக் கத்தினால் உயர்வு தாழ்வுண்டு. ராஜகோபா லாச்சாரி பிறப்பினால் அனைவரும் சமம் என்று கூறுவார். ஆனால் பொருள் லாபம் வருவதானால் அவர் இனத்தாருக்கேகொடுப் பார். அறிவினால் உயர்ந்தவனாலாம். குடி சையில் இருப்பதற்காகத் தாழ்ந்தவ னென் றும், மெத்தை வீட்டிலிருப்பதற்காக உயர்ந் தவ னென்றும் கூற முடியாது. பூணூல் அணிந்து கொள்வதால் ஒருவன் உயர்ந்த வன் ஆகமாட்டான். சந்நியாசி என்பதற்கு அடையாளமாகக் காவி வேட்டி கட்டிக் கொள்வது போலவே நூலாராய்ச்சி செய் கிறவர்கள் என்பதற்கடையாளமாக நூல் அணிந்து கொண்டனரன்றி வேறன்று.

பொதுக் கோவில்களில் அனைவரும் போக உரிமையிருத்தல் வேண்டும். லஞ்சம் ...நீதிபதியிடம் தாசர் வேண்டாம். ...என்னுடைய சொற்பொழிவை ...றேன்.

சுகாதாரக் கோட

க. விருத்தாப்பியத்திற்குக் பரம சத்துரு.

உ. எந்த மனிதன் தன்னுடைய ஆயுட் காலத்தில் செய்யவேண்டியிருக்கும் வேலை களை மூளைக்கும் நரம்புகளுக்கும் சரிமசத்து வமாகப் பகிர்ந்து கொடுக்கிறானோ அவன் அதிககாலம் ஜீவித்திருப்பான்.

ங. சரீரத்திற்குக் களைப்பு ஏற்படும்வரை வியாயாமம் செய்வதால் பிரதி கூலமே விளையும்.

ச. ஒருவன் இரண்டு கைகளையும் நீட்டி னால் இரண்டு பக்கங்களின் ஆள்காட்டி விரல்களுக்கும் இடையே எந்த அளவுஇருக் கிறதோ அந்த அளவு அவன் உயரமுள்ளவ னாக இருப்பான்.

ரு. நன்றாகத் தூக்கம் வரவேண்டுமா னால் கஷ்டப்பட்டு வேலை செய்யவேண் டும்.

சா. வைத்தியர்கள் பிணியாளர்களுக்கு மருந்து அல்லது மாத்திரைகளைக் கொடுப் பதால் ஏற்படுவதைவிட அதிக அனுகூலம் தேறுதல் மொழிகளைச் சொல்லுவதாலும், சிரித்த முகத்துடன் சம்பாஷிப்பதாலும் ஏற்படும்.

எ. அதிக வேகமாகவும், அடிக்கடியும் அளவுக்கு மிஞ்சியும் புசிப்பதாலேயே அஜீ ரண உபாதை அநேகமாக ஏற்படுகிறது.

அ. அம்மை புகட்டித் தேறியவர்கள் இதர வியாதிகளிலிருந்து தப்புவதோடு அதிக காலமும் அவர்கள் ஜீவித்திருப்பார் கள்.

கூ. அதிககாலம் ஜீவித்திருக்க வேண்டு மானால் மெதுவாகச் சாப்பிடவேண்டும்; வேகமாகச் சாப்பிடுகிறவர்கள் அற்பாயுளு டையவர்களாக இருப்பார்கள்.

க0. குழந்தைகளுக்கு முதன் முதல் கூ-வது மாதத்தில் பல் முளைக்க ஆரம்பிக் கிறது. ரு வயதுக்குள் எல்லாப் பற்களும் முளைத்துவிடுகின்றன. எ வயது முதல் உக வயதுக்குள் இரண்டாவது தடவை பற்கள் முளைக்கின்றன.

கக. சந்துஷ்டியாக விருப்பது ஆத்மா வுக்குப் பெரிய உபகாரத்தைச் செய்வதா கும்.

கஉ. நிதானம் தவறிவிடாமலிருப்பது உயிரைக் காப்பதற்குத் தகுந்த வழி.

கங. சரீரம் களைத்துப் போயிருக்கை யில் குளிர்ந்த ஜலத்தில் ஸ்நானம் செய்யக் கூடாது. ஆகாரத்தைப் புசித்து இரண்டு மணி நேரத்திற்குள்ளும் ஸ்நானம் செய்யக் கூடாது.

கச. குடியானவர்களுக்கு மூளை வேலை அதிகமாக இல்லாததாலும், சரீரத்திற்கு அதிக வேலை ஏற்படுவதாலும், சுகவழிகளை அவர்கள் பின்பற்றி நடக்காததாலும் வேதாந்திகளைப் போல் அவர்கள் அதிக காலம் ஜீவித்திருப்பதில்லை.

கரு. நீங்கள் சந்துஷ்டியாக இருந்தவா வேண்டுமானால், பலன்தரத்தக்கதாகவும் பிறருக்கு உபகாரமாகவும் நன்மையாகவும் இருக்கக்கூடியதாகவுமுள்ள வேலைகளைச் செய்துவர வேண்டும்.

கசா. ஹிருதயத்தில் கன்னங்கபடு இல் லாமலிருந்தால் ஆகாரம் சுலபமாக ஜீரண மாகும்.

கஎ. ஒரு மனிதன் புசிக்கும் ஆகாரத் திற்கும், பருகும் பானத்திற்கும் தகுந்த படியே அவனுடைய சரீர மனோ குணங் கள் இருக்கும்.

---







# மதுவிலக்கு இயக்கமும் கிறிஸ்தவர்களும்.

'பீப்பிள்' பத்திரிகையில் ஓர்கிறிஸ்த வர் எழுதியிருக்கும் ஓர் கட்டுரையின் மொழிபெயர்ப்பு வருமாறு:—

உலகம் முழுதும் "பூஸிக்கால்ஜான் ஸன்" என்று அழைக்கப் பட்டுவரும் மிஸ்டர் வில்லியம் இ. ஜான்ஸன் என் பவர் இவ்வாண்டு இறுதியிலாவது வரும் ஆண்டுத் துவக்கத்திலாவது இந்தியாவிற்கு விஜயம் செய்ய எண் ணிக் கொண்டிருக்கிறார். தற்பொழுது அவர், அகில உலக மதுவிலக்குப் பிர சார சபையின் டைரக்டராக விருந்து வருகிறார். அதன் தலைமைக் காரியா லயம் லண்டனி லுள்ளது. அவர் இந் தியாவிற்கு விஜயம் செய்ய அனுமதிக் கக் கூடாதென்று பிரிட்டிஷ் அர சாங்க அதிகாரிகள் பலமாகக் கிளர்ச்சி செய்து வருகின்றனரென அமெரிக் கப் பத்திரிகைகளிலிருந்து தெரிகின் றது. ஆங்கிலப் பொது மக்கட் கழகத் தில் அங்கம் வகிக்கும் இந்தியரான ஸ்ரீமான் ஸகலத்வாலாவிற்கு இந்தியா விற்கு வர அனுமதிச் சீட்டு வழங்க மறுத்ததுபோல் மிஸ்டர் ஜான்ஸன் இந்தியா செல்ல அனுமதிச் சீட்டு வழங்க மறுக்கத் துணியமாட்டார்கள். ஏனெனில் அவர் அமெரிக்கநாட்டைச் சேர்ந்தவர். மிஸ்டர் ஜான்ஸன் அவர்க ளது இந்திய விஜயத்தால், இந்திய நாட்டில் ஏற்கனவே உரம் பெற்று வந்துகொண்டிருக்கும் மதுவிலக்கு இயக்கம் இன்னும் அதிக வலுவடையு மென்பதில் ஐயமில்லை. மதுவகைகள் உற்பத்தி செய்து வியாபாரம் செய் யும் பிரிட்டிஷார், இந்தியாவில் மிஸ்டர் ஜான்ஸன் அவர்கள் செய்யப் போகும் பிரசாரத்திற்குப் பல வகைகளிலும் இடையூறுகள் செய்ய அரசினரைப் பெரிதும் தூண்டுவார்கள். அவ்வாறு செய்யாம விருப்பார்களாயின் அது போாச்சரிய மாகவே யிருக்கும். தங் களது சொந்த நலனை முன்னிட்டு பிரிட்டிஷ் அரசினர் என்னென்ன முறைகளைக் கையாண்ட போதிலும் இந்தியப் பெருமக்கள் பூஸிக்கால் ஜான்ஸனை அன்போடும் ஆதரவோடும் வரவேற்பார்களென்பது திண்ணம்.

### பலவந்த முயற்சி.

மிஸ்டர் ஜான்ஸன் அவர்கள் இந் தியாவிற்கு விஜயம் செய்யப் போகும் தருணத்தில், உலக முழுதும் நடை பெற்றுவரும் குடிவகைகளின் வியா பாரத்திற்குக் கிறிஸ்தவர்கள் எவ்வ ளவு பொறுப்பாளிக ளென அவர் கருதியிருக்கிறா ரென்பதை நமது வாச கர்கள் தெரிந்துகொள்ளுவது உசித மாகும். உலகின் பல்வேறு பாகங்களி லும் ஆங்காங்குள்ள ஜனங்களின் விருப்பத்திற்கு மாறாக குடிப் பேயை கிறிஸ்தவ இனத்தவர்க ளென்று சொல்லப்படுவோர் எங்ஙனம் புகுத்து கின்றனர் என்பது குறித்தபுள்ளி விவ ரங்களை விளக்கி 'தி கிறிஸ்டியன் ஸெஞ் சரி' எனும் பத்திரிகையில் அவர் ஓர் கட்டுரை வரைந்துள்ளார். குடிப் பேயை ஒழிக்கவேண்டுமென்பதையே தங்கள் மதமாகக் கொண்டவர்கள் இவ்வுலகில்மொத்தம் எ0-கோடிப்பேர் கள் இருக்கின்றனரென் அவர் குறிக் கின்றார். இவர்களுள் ௩0-கோடி முஸ் லீம்களாகவும், உக-கோடியே ருO-லட் சம் இந்துக்களாகவும், கரு-கோடி புத்தமதத்தினராகவு மிருக் கின்றனர். கிறிஸ்தவ இனத்தவர்கள் கப்பல்க ளோடும், பீரங்கிகளோடும், மேற் குறித்த ஜனங்களிடம் சென்று, குடி வகைகளைத் தம்மிடை புகுத்தவும் அதனை ஆதரிக்கவும் இணங்குமாறு பலவந்தப் படுத்துகின்றனர். இது பற்றி வெவ்வேறு தேசங்களிலும் நடந்த சம்பவங்களையும், நடந்துவரும் சம்பவங்களையும் அக்கட்டுரையில் விளக்கியிருக்கின்றார்.

துருக்கியைப் பற்றி அவர் குறிப் பிடுகையில், நான்கு ஆண்டுகளுக்கு முன் அந்நாடு விடுதலை பெற்றதும் முதலாவதாச் செய்த சீர்திருத்தம் குடிப் பேயையொழிக்கச் சட்டம் செய்ததேயாகும் எனக் கூறுகின்றார். "தனது ஆதிக்கத்திலிருந்த பகுதியில் இச்சட்டத்தைத் துருக்கிய அரசாங் கத்தினர் அமுலுக்குக் கொண்டுவந் தனர். பின்னர் பிரஞ்சுக்காரர் ஸைலீ ஷியவை விட்டகன்றதும் அங்கும், கிரேக்கர்கள் ஸ்மிர்னாவிலிருந்து வெளியேறியதும் அங்கும், நேசதே சத் துருப்புகள் பாஸ்பாஸிலிருந்து புறப்பட்டதும் அங்கும் மது விலக்குச் சட்டத்தினை அமுலுக்குக் கொண்டுவந்தனர். இதன் பின்னரே அந்நாடு சங்கடநிலைமைக்குள்ளாயிற்று. துருக்கிய நாட்டுப் பொதுக் கடனுக்கு வெளியிலுள்ள கிறிஸ்தவ இனத்தவர் கள் பொறுப்பாளிகளா யிருந்தனர். இப்பொறுப்பிற்காக துருக்கி நாட்டின் கலால் வருமானத்தைக் கொடுப்ப தென உறுதி கூறப் பெற்றிருந்தது. எனவே இக்கிறிஸ்தவ அரசாங்கங்கள் துருக்கிக்குக் கேடு சூழத் துவங்கிய தோடு மது வியாபாரத்தை மீண்டும் துவங்கும்படி கட்டாயப்படுத்தி வரு கின்றன. அது முதல் துருக்கியர்கள் மது விலக்குச் சட்டத்தை மீண்டும் ஏற்படுத்தக் கூடிய நிலை யெய்தும் பொருட்டு தங்களது அரசாங்கக் கடன் விஷயத்தில் ஒழுங்குகள் செய்ய முயன்று வருகின்றனர், என அக்கட் டுரையின் ஓர் பகுதியில் காணப்படு கின்றது.

அல்ஜீரியாவிலும் மொராக்காப் பிர தேசங்களிலுமுள்ள ஜனங்களை மது வகைகள் அருந்துமாறு செய்து அப் பிரதேசங்களின் கடற்கரை யோரங் களைத் திராட்சைத் தோட்டங்களாகச் செய்தவர்கள் கிறிஸ்தவர்களாக விருந்து வரும் பிரஞ்சு அரசாங்கத் தாரேயென்றும், குடிவகைகளை அறவே வெறுக்கும் அந்நாட்டு மக்கள், தம் மிடை அதனைப் புகுத்துவதை எவ்வ ளவோ ஆட்சேபித்தும் அவ்வாட்சே பங்களை அவர்கள் பொருட்படுத்த வில்லை யென்றும் மிஸ்டர் ஜான்ஸன் தெரிவிக்கிறார்.

எகிப்திய நாட்டில் குடிவகைகளின் வியாபாரத்தைத் தோற்றுவித்து அபி விருத்தி செய்தவர்கள் கிறிஸ்தவர்க ளாகிய பிரிட்டிஷாரே என விளக்கப் பெற்றுள்ளது. நான்கு ஆண்டுகட்கு முன் எகிப்திய அரசாங்கத்தார் அலெக்ஸாண்டிரியா, கெய்ரோ, போர்ட் ஸெட், ஸூயஸ் ஆகிய நான்கு நகரங் களிலும் கிறிஸ்தவர்கள் வசிக்குமிடங் களைத் தவிர ஏனைய பகுதிகளிலும், மற்ற ஊர்களிலும், புதிதாக மதுவகை களின் வியாபாரம் துவங்குபவர்க ளுக்கு லைஸென்ஸ்கள் கொடுப்பதில்லை யென்றும், பழைய லைஸென்ஸ்களைப் புதுப்பிப்பதில்லை யென்றும் ஓர் கொள் கையை அனுஷ்டிக்கத் துவங்கிவிட்ட னர். அநேகமாக இந்த லைஸென்ஸ் களில் பாதிக்கு மேல் முன்னரே குறைந்து விட்டன. விரைவில் பிரஸ் தாப நான்கு நகரங்களிலும் கிறிஸ்த வர்கள் வசிக்கும் பகுதிகளைத் தவிர வேறு எவ்விடத்திலும் மதுவகைகள் கிடைக்காது போய்விடும். அந்நிய அர சாங்கத்தாரது ஆதரவு தங்களுக்கிருப் பதால் தங்களது தொழிலுக்கு எவ் வித தீங்கும் நேராதென மது வியாபா ரிகள் கருதியிருக்கின்றனர். ஆனால் முஸ்லீம்களோ இதனைப்பலமாக எதிர்த் துப் போராடத்தக்க சமயத்தினை எதிர் பார்த்துக் கொண்டிருக்கின்றனர்.

பாலஸ்தீனம் துருக்கியர்களது ஆதிக்கத்திலிருந்து வந்த காலத்தில் கிறிஸ்தவ யாத்ரீகர்களுக்குப் பயன் படும் பொருட்டு உரு மதுக்கடை களுக்கு லைஸென்ஸ்கள் கொடுக்கப் பட்டிருந்தன. பிரிட்டிஷாரது ஆதிக்கத் திற்குள் அந்நாடுவந்ததும் மதுவியாபா ரத்திற்கு ௩00 லைஸென்ஸ்கள் கொடுக் கப்பட்டு விட்டன. இதில் உகூகூ லைஸென்ஸ்கள் கிறிஸ்தவர்களிடமோ அல்லது யூதர்களிடமோ தானிருந்து வருகின்றது. ஒரே ஒரு முஸ்லீம் மட்டுமே மது வியாபார லைஸென்ஸ் பெற்றுள்ளார். இவ்வொரு முஸ்லீமை யுங்கூட அவரது தவறான வழியினின் றும் மாற்ற அராபிய சங்கத்தார் முயன்று வருகின்றனர்.

டிரான்ஸ் ஜோர்டேனியா பிரதேசம் கிறிஸ்தவர்களான பிரிட்டிஷாரது ஆதிக்கத்திற்கு வருமுன் அந்நாட்டில் குடிவகைகளின் வியாபாரமே கிடை யாது. இப்பொழுது கிறிஸ்தவர்க ளெனப் படுவோர் பலர் வந்து குடிக் கடைகள் திறந்து விட்டனர்.

பல்கேரிய நாட்டில் ஆட்சி புரிந்து வரும் கிறிஸ்தவ அரசாங்கத்தார் பூரண மதுவிலக்கு இயக்கத்தை எதிர்த்து வருகின்றனர். அங்குள்ள கிறிஸ்தவ மத போதகர்களை மதுவிலக் குக் கொள்கையினை அனுஷ்டிக்குமாறு செய்வதே பெரும் பிரச்னையாக இருந்துவருகிறது. ஜூகோ ஸ்லேவியா, போஸ்னியாஎனும் பிரதே சங்களிலும் பல்கேரியாவில் தோன்றி யுள்ள நிலைமையேதான் ஏற்பட்டிருக் கின்றது.

சர்வதேசச் சங்கம் மெஸபொடேமி யாவின் ஆதிக்கத்தை இங்கிலாந்திற்கு அளித்ததும் முதன் முதலாக அப் பிரதேசத்தில் செய்த வேலை, ஈச்சம் பழத்தினின்றும் வெறிதரும் குடிவகை கள் தயாரிக்கமுடியுமா எனச் சோதிக் கும் பொருட்டு பரீட்சார்த்த குடி வகைகள் தயாரிக்கும் தொழிற்சாலை யொன்றை பஸ்ராவில் ஏற்படுத்தியதே யாகும்.

### இவ்விழிவு போதாதா?

கிறிஸ்தவ இனத்தவர்கட்கு இதைக் காட்டிலும் வேறு என்ன இழிவு வேண்டும்? கிறிஸ்தவ மதத்தில் மிகுந்த பற்றுள்ள பூஸிக்கால் ஜான் ஸனே கிறிஸ்தவர்களை நன்கு தூஷித்து ஏராளமான சந்தாதாரர்களையுடைய ஓர் பத்திரிகையில் எழுதியிருப்பது மது விலக்கு இயக்கத்திற்கோர் நற்சகுன மாகும். குடி, உலகத்திற்கே தீங்கு விளைக்கின்றதென்பதைக் கிறிஸ்தவர் களும் உணரத் துவங்கிவிட்டனரென் பதற்கு, அமெரிக்காவில் மதுவிலக் குச்சட்டம் ஏற்பட்டிருப்பது ஓர் அறி குறியாகும். மதபோதகர்களின்முயற்சி காரணமாக ஸ்வீடன் தேசத்தில் மது விலக்கு இயக்கம் தீவிரமாக முன்னேற் றமடைந்து வருவதாகத் தெரிகிறது. டென்மார்க்கு தேசத்தில் இன்னும் அதிகமான முன்னேற்றம் மதுவிலக்கு விஷயத்தில் காணப்படுகின்றது. அமெ ரிக்கர்களின் உதவியால் அகில உல... மதுவிலக்கு இயக்கம் எக்கும் உர... பெற்று வருகின்றது. இந்த லட்சிய... தை நாடியுழைக்கும் அமெரிக்கர்க... ளனைவரும் மிகுந்த மத பக்திகொண்ட கிறிஸ்தவர்களாவார்கள்.

### இந்தியாவின் நிலை.

உலகின் மற்ற பாகங்களிலிருப்பது போல் இந்தியாவிலும் பிராடஸ்டெண்ட் கிறிஸ்தவர்களே மதுவிலக்கு முயற்சி யில் ஈடுபட்டு முயற்சித்து வருவதைக் காண்கின்றோம். அகில இந்திய மது விலக்குச் சங்கத்தின் பொதுக்காரிய தரிசியாயிருந்து வருபவர் பிராட்ஸ டண்டு பாதிரியான ஓர் பிரிட்டிஷ்கா யாவர். இந்தியாவில் மதுவிலக்கிற்கு அரும்பாடுபட்டுவரும் ரெவரண்ட் ஹெர்பர்ட் ஆண்டர்ஸன் எனும் நாம முள்ள அவரை அனைவரும் அறிவர். அமெரிக்காவிலுள்ள ரோமன்கத்தோ லிக்கர்களது மனப்பான்மையும், எபிஸ் கோபல்சர்ச்சைச் சேர்ந்தவர்களது மனப்பான்மையும், மதுவிலக்கை... தவிர வேறு எவ்விஷயத்திற்கும் எ... வேண்டுமாயினும் செய்யலாமென... விருந்து வருவது போலவே இந்தியா விலுள்ள அவ்வகுப்புக்களைச் சேர்ந்த வர்களது மனப்பான்மையும் இருந்து வருகின்றதெனலாம். ஏராளமான ஜனங்களிடம் செல்வாக்குப் பெற் றுள்ள இந்தியாவிலுள்ள ரோமன் கத்தோலிக்க பிஷப்புகள் தங்களது ஆதிக்கத்திலுள்ளோர் மதுவருந்திச் செய்யும் தீச்செயல்களைத் தடைசெய் யப் பெரும்பாலும் எதுவும் செய்வ தில்லை. உண்மையைக் கூறுவோமாயின் ரோமன் கத்தோலிக்க கிறிஸ்தவர்கள் தொகையில் அதிகமாகவிருந்து வரும் இடங்களிலேயே இந்தியாவில் குடியின் கேடு அதிகமாகவிருந்துவரு கின்றதெனலாம். உலகத்திலிருந்து அடிமை வியாபாரத்தை பொழிக்க பல தலைமுறைகள் தீவிர பிரசாரம் செய்யவேண்டுவது அவசியமாயிருந் தது. இக்கிளர்ச்சியில் ரோமன் கத்தோலிக்க மத போதகர்களும் அவர் வழிச்செல்லும ஏனைய கிறிஸ்தவ மதபோதகர்களும சிறிதும் ஈடுபடாது தங்களது வேலையிலேயே கவனமாக விருந்து வந்திருக்கின்றனர். வில்பெர் போர்ஸ் போன்ற பிராடஸ்டெண்டு கிறிஸ்தவர்களும அவர் தம் சிறு குழு வினருமே அடிமை வியாபாரமெனும் தீங்கு உலகினின்று ஒழிவதற்குப் பெரு முயற்சிகள் செய்தனர். இப் பொழுது குடிப்பேயை ஒழிக்கச்செய் யப்பட்டுவரும் போராட்டத்திலும் அவ்வாறே நிகழாதிருக்குமென நம்பு வோமாக! இந்தியாவிலுள்ள இந்துக் களும், முஸ்லீமகளும குடிப்பேயை யொழிக்க முயன்றுவரும இத்தருணத் தில, ஜீவகாருண்யத்தைப போதித்த கிறிஸ்துநாதரைப் பின்பற்றுவோ ரெனச் சொல்லிக் கொள்வோர்கள் அவர்களது உற்றதுணையாயிருந்து உதவி செய்யவில்லையென்று கூறுவது மிகையாகாது.

---

ஸ்ரீ மீனாக்ஷி சங்கத்தின் இரண்டாவது ஆண்டு விழா மாசி-மீ உ௬உ பிற்பகல் ...ன்கு மணிக்கு மடத்தில் நடைபெற்றது. ...டம் கொடிகளாலும், தோரணங்களாலும் அலங்கரிக்கப் பெற்றிருந்தது. ...ரானமான ஆண்களும், பெண்களும் ...ஜயம் செய்திருந்தனர். அமராவதி ...தூர் திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமை வகித்தார்கள். ...ாரியதரிசியால் தலைவருக்கு வந்தனோபசாரப் பத்திரம் படித்துக் கொடுக்கப்பட்டது. பின்னர் இரண்டாவதாண்டு அறிக்கை வாசித்தவுடன்,

### முகவுரை.

திரு. பிச்சப்பா சுப்பிரமணியன் செட்டியாரவர்கள் தலைமை வகித்துச்செய்த பிரசங்கத்தின்சாரம் வருமாறு:—

சகோதரர்களே! சகோதரிகளே!

சங்கங்களினால் உண்டாகும் நன்மைகள் பலவாகும். ஆண்கட்குச் சங்கமிருப்பது போல் பெண்கட்கும் சங்கங்கள் வேண்டும். பல சங்கங்கள் ஒரு வேலையும் செய்யாது வருஷக் கொண்டாட்டம் நடத்துவதோடு நிற்கின்றன. ஆனால் இச்சங்கமோ மாதந்தோறும் கண்டிப்பாக ஒரு கூட்டங் கூட்டி பல சொற்பொழிவுகள் நிகழ்த்துமாறு செய்திருக்கிற தென்பதை நீங்கள் அறிக்கையினால் அறிந்திருப்பீர்கள். சங்கங்கள் வைத்து நடத்துவதற்கு நம்மவர்க்கு நல்ல வசதியுண்டு. வாலிபர்கள் இங்கு ஒரு வேலையுமின்றி இருக்கிறார்கள். அவர்கள் முன்னின்று உழைப்பார்களாயின் நமது காரியங்கள் எல்லாம் நிச்சயமாக வெற்றியாக முடியும். வேலை செய்ய முற்படுங்கால் லட்சியம் வைத்துக் கொண்டு வேலை செய்ய வேண்டும். குறிப்பிட்ட ஒரு லட்சயமில்லாமல் வேலை செய்வதால் பயனில்லை. ஆண்களுக்குப் பெண்கள் உதவியாக இருக்க வேண்டும். மேல்நாட்டில் யுத்தத்தின் பொழுது ஆண்களுக்கு உதவியாகப் பெண்கள் வேலை பார்த்தனர். இத்தகைய நிலை நம் நாட்டிலும் வரவேண்டும். சங்கம் என்றால் கூட்டம் என்றே பொருள். கூட்டங் கூடித்தீர்மானம் செய்து அதன்படி நடப்பது என்பது நமது பழங்கால வழக்கமேயாகும்.

### திரு. நடராஜ ஆச்சாரியார்.

பின்னர்—திரு. நடராஜ ஆச்சாரியார் "தமிழர் வீரம்" என்னும் பொருள் பற்றிச் சொற்பொழிவாற்றினார். அதன் சாரம் வருமாறு:—

தலைவரவர்களே! கனவான்களே! சீமாட்டிகளே!

வீரம் என்பதற்கு ஆண்மை, அஞ்சாமை, வலிமை என்றே பொருள் கொள்கிறேன். அதனைக் கைப்பிடித்து தமிழர் எவ்வாறு வாழ்ந்தனர் என்பதை நாம் ஆராய வேண்டும். உடல் வலிமை பெற்றவர் மட்டும் வீரரன்று. தமிழ் நாட்டில் போர் வீரர்கள் இருந்தனர்; உள வீரர்களிருந்தனர்; கன்ம வீரர்களிருந்தனர். தமிழர்கள் தமிழ் நாட்டை மட்டுமின்றி வடநாட்டையும், பர்மா, சுமத்ரா, ஜாவா முதலிய வெளிதேசங்களையும் போரின் திறனால் வெற்றி பெற்று ஆண்டுவந்தன ரென்பதற்குப் பல சான்றுகள் உள்ளன. சேரன், செங்குட்டுவன், இராஜ இராஜ சோழன் ஆகியவர்களுடைய வீரச் செயல்கள் நமது பழந் தமிழ் நூல்களில் காணப்படுகின்றன. திருநீலகண்டர் ஒரு கன்ம வீரர். அவர் மனைவியினிடம் காட்டிய வீரம் போற்றற்குரியது. இன்னும் இதுபோன்ற பல வீரர்கள் முன் காலத்தில் நம் நாட்டில் இருந்தனர். இன்று நாம் வீரமில்லாதவர்களாய் வாழ்கிறோம். மீண்டும் பண்டைய நிலைமையை அடைவதற்கு முயல வேண்டுவது நமது கடமையாகும்.

### திரு. ஆவி. லெ. அருணாசலச் செட்டியார்.

பின்னர் திரு. ஆவி. லெ. அருணாசல செட்டியாரவர்கள் "தனவைசிய நாடும் சங்கங்களும்" என்பதுபற்றிப் பிரசங்கம் செய்தார். அதன் சாரம் வருமாறு:—

...நாட்டில் பல சங்கங்கள் தோன்றின. ஆனால் பலபெரியோர்களும், ...ளும், தனவைசிய நாட்டின் ... எண்ணிக்கொண்டிருப் ... நாட்டுக்குச் செய் ...ழியத்தைவிட்டுப் ...கப் பெருந் ...ர். ...லோடி ...ன் இர்

# கொ. இலக்குமிவாரம்.

## ஸ்ரீ மீனாட்சி சங்க ஆண்டுவிழா.

(நமது விசேஷ நிருபரிடமிருந்து)

நாட்டுக்குத் தொண்டு செய்வதாகப் பலர் ஏமாற்றுகின்றனர். அன்னார் தொண்டு செய்வதாகக் கூறுவதெல்லாம் ஏமாற்றமேயன்றி வேறன்று. "செட்டிநாடுடையவர்கள் செட்டியார்கள். எனவே அதனை நிலை நாட்டத்தோற்றுவிக்கப்பட்டிருக்கிறது" என்று தலைவர்கள் என்போரால் கூறப்பட்ட தனவைசிய ஊழியர் சங்கம் எங்கே? முதலாவது கூட்டத்தைக் கூட்டியது. அதில் செய்யப்பட்ட தீர்மானங்கள் மறைந்தன. பின்னர் அச்சங்கத்தைக்காணவில்லை. சிறு நிலையிலிருந்து தான் பெரு நிலைக்குச் செல்லவேண்டும். முதற்படியிலிருந்து ஏறியே மேல்படிக்குச் செல்லவேண்டும். திடீரென்று மேல்படிக்கு ஏறினால் பல்லுடைந்துபோகும். பேச்சளவிலும், விண்ணப்பங்கள் அளவிலும் இருப்பதில் பிரயோஜனமொன்றுமில்லை. செய்கையில்வர வேண்டும். தலைவர் என்றால் அவருக்குப் பொறுப்பு இருக்க வேண்டும். பொறுப்பில்லாத ஒருவர் தலைவரெனக் கருதிக்கொள்வது பிசகு. வெள்ளைக்காக்கையைக் கறுப்புக்காக்கை என்பதும், கறுப்புக்காக்கையை வெள்ளைக் காக்கை என்பதும், 'ஏன் இவ்வாறு பிசகாகச் சொல்கிறீர்கள்' என்று கேட்டால் 'என்னுடைக் கொள்கை' என்று கூறுவதும் தலைவர் என்போர்க்கு அழகல்ல. ஜனங்கள்வழிச்சென்று சீர்திருத்தம் செய்யவேண்டுமே தவிர, நம் வழிக்கு ஜனங்கள் வந்தபிறகு சீர் திருத்தம் செய்கிறேன் என்றுகூறுவது சரியல்ல. நம்மைச் சீர்திருத்தும் துறையாகிய சிறுதுறையிலிருந்தே தேசத்தைச் சீர்திருத்தும் துறையாகிய பெருந்துறைக்குச் செல்லவேண்டும். அவ்வாறின்றித் திடீரென்று பெருந்துறைக்குச் செல்வதாகக் கூறுபவர்கள் நம்மை ஏமாற்றுகின்றவர்களேயன்றி வேறன்று. முக்கியமாக சங்கங்கள் நன்கு வேலை செய்ய வேண்டும், தூங்கிக்கொண்டிருத்தல் கூடாது. பொதுவாக எல்லாச் சங்கங்களும் மூன்று கொள்கைகளை வைத்துக் கொள்ளலாம். சமய வழிக்காக ஜீவகாருண்யத்தையும், அரசியலுக்காக கதர் அணிவதையும், சமூகத்துக்காகச் சமூக சீர்திருத்தத்தையும் வைத்துக்கொள்ளலாம். ஆனால் புலால் புசிக்கும் அங்கத்தவரையும் சேர்த்துக்கொள்ளத்தான் வேண்டும். ஏனென்றால் அவ்வன்பர்கள் தொகை மிகுதியாக இருக்கும்பொழுது அவர்களை விலக்கிவிடுவோமானால் நமது வேலை நன்கு நடைபெறாது. அவர்களையும் சங்கத்தில் சேர்த்துச் சீர்திருத்தவேண்டும். ஏமாற்றுந் தலைவர்களாலும், கடற்கரைவீரர்களாலும் ஒருவித பயனுமில்லை. ஒவ்வொரு தனவணிக இளைஞனும் தான் பிறந்த சமூகத்திற்கே முதலில் தொண்டு புரியவேண்டும். தேச ஊழியத்தை இரண்டாவதாக வைத்துக் கொள்ளலாம். இப்பொழுது நம் நாட்டிலிருக்கும் சங்கங்கள் இன்னும் தூங்கிக் கொண்டு இருக்காதவாறு செய்யவேண்டியது ஒவ்வொரு இளைஞரின் கடமையாகும்.

### முடிவுரை.

பின்னர் தலைவரவர்கள் முடிவுரை கூறிய தன் சாரம் வருமாறு:—

அன்பர்களே! ஆச்சாரியா ரவர்கள் "தமிழர் வீரம்" என்பது பற்றி மேற்கோள்களோடு மிக அழகாகச் சொன்னார்கள். ஆனால் அத்தகைய வீரம் இப்பொழுது இருக்கிறதா வென்று பார்த்தால், இல்லை. வேடிக்கையாகச் சொன்னால் கடையில் இருக்கிற வீரம், பூரம், பாஷாணத்தைத் தவிர நம்மிடம் வீரமில்லை. நாம் பிள்ளைகளுக்குக் கெற்பத்திலேயே பயத்தை ஊட்டி வருகின்றோம். வீரமாக ஒன்றரை மணிநேரம் பிரசங்கம் செய்யலாம். ஆனால் அது செய்கையில் வரவில்லை. பெண்கள் கெற்பத்தி லிருக்கும்பொழுது கவனமாக இருக்கவேண்டும். கெற்பத்தின் பொழுது எப்படி ஒரு தாய் இருக்கிறாளோ அதுபோலவே அவளுடைய பிள்ளையுமிருக்கும். இதற்கு உதாரணம் பாரதத்திலுள்ள அபிமன்யு கதையைக் குறிப்பிடலாம். தன் குழந்தை சிறந்த சித்திரக்காரனாக இருக்க வேண்டுமானால் தாயானவள் கெற்ப காலத்தில் அழகான சித்திரங்களை எழுதி எழுதி மகிழவேண்டும். தன் குழந்தை வீரமாயிருக்க வேண்டுமென்னும் எண்ணமுடைய தாய் தனது கெற்பகாலத்தில் வீரர்களுடைய சரித்திரங்களைப் படிக்க வேண்டும். கெற்பகாலத்தில் துர்க்குணங்களோடு இருக்கக்கூடாது. ஆனால் நமது பெண்மணிகள் கெற்பகாலத்தில் ஒப்பாரி வைக்கப் பழகுகிறார்கள். கோபமாகப் பேசுகிறார்கள். அவர்களுடைய பிள்ளைகளும் அழுமூஞ்சிப் பிள்ளைகளாகவும், கோபமுள்ள பிள்ளைகளாகவுமே இருக்கின்றன. ஒரு கெற்பத் தாய் ஒரு மீன் வாங்கி அதன் மூக்கில் கயிறைக் கட்டித் தூக்கிக்கொண்டு வந்தாள். வழியில் மூக்கறுந்து மீன் நழுவி விட்டது. அவள் மூக்கறுந்து விட்டதே, மூக்கறுந்து விட்டதே என்று நினைத்துக் கொண்டேயிருந்தாள்; அவளுக்குப் பிறந்த குழந்தை மூக்கறுந்து பிறந்தது. எனவே கெற்பகாலத்தில் நல்ல எண்ணங்களை எண்ணவேண்டும்; நல்ல செயல்களைச் செய்யவேண்டும். அப்பொழுது தான் நல்ல வீரமான குழந்தைகள் பிறக்கும்.

ஒருவன் ஒரு காருக்குப் பத்துக் கார் வைத்துக் கொள்ளலாம். ஒரு வீட்டுக்குப் பத்து வீடு வைத்துக் கொள்ளலாம். பத்து லெட்சம் பணம் உடையவனாக இருக்கலாம். ஆனால் அவனுடைய மனைவி நல்லவளாக, சுதந்திரமுடையவளாக இல்லாவிட்டால் அவைகளினால் என்ன பிரயோஜனம்? நாம் பெண்மக்களைத் தாழ்த்தி வைத்திருப்பதாலன்றோ நமக்குநல்லவீரமான பிள்ளைகள் பிறக்கவில்லை? பெண் மக்களுக்குச் சுதந்திரம் கொடுத்து நல் வாழ்வு வாழ்வோமானால் 'சிவநேசன்' போன்ற ஒரு பத்திரிகை தோன்றியிருக்குமா?

எப்பொருள் யார்யார்வாய்க் கேட்பினும் அப்பொருள்
மெய்ப்பொருள் காண்பதறிவு.

என்று வள்ளுவர் கூறியபடி யார் என்ன சொன்னாலும் அதனை நன்கு ஆராய்ந்து செய்யுங்கள். வீரனுக்கு முன்னால் 'சிவநேசன்' போன்ற பத்திரிகைகள் என்ன செய்யமுடியும்? நமஸ்காரம் செய்துவிட்டுச் செல்லும். நாம் பெண்களுக்குச் சமவுரிமை கொடுத்திருந்தால் 'சிவநேசன்' முளைத்திருக்குமா? ஊழியர் சங்கத்தார் தொண்ணூற்றுறூர்க் கூட்டத்தைக் கூட்டினார்கள். பல தீர்மானங்கள் செய்யப்பட்டன. அவைகள் எங்கே? அத்தீர்மானங்கள் ஆண்மக்களால் செய்யப்பட்டன. பெண்மக்கள் கூட்டங்கூடித் தீர்மானங்கள் செய்வார்களானால் அது அழிந்துபோகுமா? நமக்கு வீரவாழ்வு வேண்டுமானால் பெண்மக்களுக்குச் சமவுரிமை கொடுக்க வேண்டும். அப்பொழுதுதான் நல்ல குழந்தையைப் பெற்று பழந்தமிழர்களது வீரவாழ்வினை நாமும் பெறலாம்.

ஊழியர் சங்கத்தைப்பற்றி நண்பர் அருணாசலச் செட்டியாரவர்கள் சொன்னார்கள். அச்சங்கம், நான்தான் காரியதரிசி என்று சொல்லிக் கொள்ள முடியாத நிலையிலிருக்கிற தென்பதை ஒப்புக்கொள்ள வேண்டியதான். ஒரு காலத்தில் இந்த நாடு முழுதும் பிரசாரம் செய்து தொண்ணூற்றுறூர்க்கூட்டத்தைக் கூட்டியது ஊழியர் சங்கமே. ஆனால் இப்பொழுது அதனால் ஒன்றும் முடியவில்லை. எனினும் அச்சங்கத்தில் அங்கத்தினர்களாயிருந்தவர்கள் வேலை செய்து கொண்டுதானிருக்கிறார்கள். ஜனங்களோடு கலந்துதான் வேலைசெய்ய வேண்டும். ஜனங்கள் எல்லோரும் நல்லவர்கள். என் காரியத்தை நான் பார்த்துக் கொள்ள முடியாமல் பிறருக்குச் சொல்வதால் பிரயோஜன மொன்றுமில்லை. ஜனங்கள் நமது வழிக்கு வரவில்லை யென்றால், ஜனங்களைத் திருப்பும் ஆற்றல் நமக்கு இல்லை யென்பதே பொருள். ஆற்றமாட்டாமல் ஜனங்கள் மேல் குறை கூறலாம். நமது இயக்கங்களைப்பற்றி எழுத வேண்டும்; பேசவேண்டும். அதில் அபிப்பிராய பேதம் வரலாம். அதற்காகச் சண்டையிட்டுக் கொள்ளக் கூடாது. சண்டை வேண்டாமென்று சண்டையிடுபவர்களிடம் கூறினால் உண்மையை விளக்குகிறேன் என்கிறார்கள். தனி மனிதன் பேரில் தாக்குவது உண்மையை விளக்குவதல்ல. அபிப்பிராயபேதமிருந்தால் அதனை விளக்கிக் காட்டலாம். இத்துடன் என்னுடைய உரையை முடித்துக் கொள்கிறேன்.

பின்னர் காரியதரிசியால் வந்தனங்கூறப் பெற்று வாழ்த்துடன் இரவு எட்டரை மணிக்குச் சபை இனிது நிறைவேறியது.

### சோக்கலிங்க வித்யாசாலை.

இவ்வூர் சொக்கலிங்க வித்யாசாலையின் முதலாவது ஆண்டுவிழா நிகழும் மாசி-மீ உ௫, உ௬ ஆம் தேதிகளில் இனிது நடைபெற்றது. முதல் நாள் ராயவரம் காந்தி பாடசாலை ஆசிரியர் திருவாளர் அனந்தன் பிள்ளையவர்கள் தலைமையில் மாணவர்களின் போட்டி விளையாட்டுக்கள் நடைபெற்றன. அடுத்தநாள் திருவாளர் பிச்சப்பா சுப்பிரமணியன் அவர்கள் தலைமையில் மாணவர்களின் பேச்சு, பாட்டு, நடிப்பு ஆகியவைகள் நடைபெற்றன. மாணவர்கள் "அசோகன் அறமன்றம்" எனும் நாடகத்தை அழகாக நடித்துக்காட்டினர். பிள்ளைகளுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. பின்னர் அனந்தன் அவர்களும், அரு. சோமசுந்தரன் அவர்களும், குழந்தை வளர்ப்பு, கல்வி முறை என்பனபற்றி உணர்ச்சியுடன் பேசினார்கள். தலைவர் முகவுரை, முடிவுரை இரண்டிலும் கல்வியைப் பற்றியும், சமூக சீர்திருத்தத்தைப் பற்றியும் நன்கு எடுத்து உரைத்தனர்.

---

## விற்பனை.

மகாத்மா காந்தியடிகளின் தமிழ்நாட்டுச் சுற்றுப் பிரயாணத்திற்காகவென்று புதுமாதிரியாகத் தயாரிக்கப்பட்ட டாட்ஜ் மோட்டார்கார் விலைக்கு விற்கப்படும். நெடுந்தூரம் பிரயாணத்திற்குப் படுக்கைவசதியும், எழுதுவதற்கு மடக்கு மேஜை, சொருகு பெட்டி, தண்ணீர்த் தொட்டி, பின்புறம் சாமான் வைக்கும் வசதி, முதலியவை ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. இதுவரையில் ௬௫00 மைல் தூரமே ஓடியிருக்கிறது. புத்தப் புதியதாகவே ஜாக்கிரதையாக வைக்கப்பட்டிருக்கிறது. வேண்டுவோர் ஈரோடு சர்க்கா சங்கக் காரியாலயத்தில் நேரில் பார்வையிடலாம். விலையதிகம் கோருவோருக்கு விற்கப்படும். திருச்செங்கோடு காந்தி ஆஸ்ரமம் ச. ராஜகோபாலாச் சாரியாருக்கு எழுதிக்கொள்ளலாம்.

சர்க்கா சங்கம், ஈரோடு. 28—2—28. (147)　S. ராமநாதன், காரியதரிசி.





# ருசிகரமான விவாதம்.

இந்தியாச் சட்டசபையில் வரவு செலவு திட்டம் விவாதிக்கப் படுகையில் பண்டிதர் நேரு தளகர்த்தர்பேசியபின்பேசியதாவது:-

ஸ்கீன் கமிட்டியின் சிபார்சுகளைக் கண்டு நான்உற்சாகம் கொள்ளவில்லை. நானும்அக் கமிட்டியில் முதலில் அங்கத்தினராக விருந்தேன். பிறகு அக்கமிட்டி யாதாஸ்துவெளிவந்தபோது நான் கமிட்டியிலிருந்து விலகிவிட்டதே நன்மையென ஆறுதலடைந்தேன்.

ஜனாப் ஜின்னா:— இப்போது தங்கள் அபிப்பிராய மென்ன?

பண்டித நேரு:—முன் கொண்ட அபிப்பிராயம்தான் இப்போதும் கொண்டிருக்கிறேன். கமிட்டியார் சிபார்சு செய்வது போல சாண்ட் ஹர்ஸ்ட் காலேஜ் ஒன்று இங்கு ஏற்பட்டாலும் ராணுவத்துக்குச் சரிவர இந்தியர்கள் தயாராகப் பல வருஷங்களாகும். ஆனால் பிரிட்டன் இந்தியாவை எப்போதும் தன் கைக் கீழ் வைத்துக் கொண்டிருக்க வேண்டு மென்ற பேராசையால் என்றைக்காவதுஒருநாள்இந்தியா பிறர் உதவியில்லாமல் தன் ராணுவத்தைக் கொண்டே சமாளித்துக் கொள்ளக்கூடிய ஒரு நிலைமையடைவதையும் விரும்பவில்லை. இந்திய மயமாக்குதல் என்ற வார்த்தையை நான் மனப் பூர்வமாக வெறுக்கிறேன். நாங்கள் இந்தியாவில் இருந்துவருகிறோம். இந்திய மயமாக்குவதைப் பற்றிய பேச்சு இங்கு ஏன்? இராணுவம் ஐரோப்பிய மயமாகவிருப்பதை ஒழிக்க வேண்டுமென்று தான் இந்தியர் முதலில் விரும்புகிறார்கள். இந்தியாவில் ராணுவக் கலாசாலை ஏற்படுத்தினால் அதற்கு மாணவர்கள் கிடைப்பது கஷ்டமாக விருக்குமென கவர்ன்மெண்டார் நினைப்பதாகத் தெரிகிறது. ராணுவப் பயிற்சிபெற இந்தியாவில் ஆள்கிடைப்பது கஷ்டமென்று சொல்லுவது இந்தியாவின் ஆண்மைத் தனத்தையே பழிப்பதாகவிருக்கிறது. நான் ஸ்கீன் கமிட்டியில் சொற்ப காலந்தான் இருந்தேன். அதற்குள் ஆயிரக் கணக்கான பேர் ராணுவப் பயிற்சிக்குத் தயாராக விருப்பதாகத் தெரிந்துகொண்டேன். ஆனால் கவர்ன்மெண்டார் அவர்களைக் கண்டுபிடிக்க மனம் கொள்ளவில்லை. கவர்ன்மெண்டார் இதற்குச் சாமர்த்தியமிருக்கவேண்டு மென்பதைக் கருதாமல் பரம்பரையையே பெரிதாகக் கருதுகின்றனர்.

(ஒருவர்:—அதுஉண்மை.)

சாண்ட் ஹர்ஸ்ட் காலேஜிலிருந்து இந்திய மாணவர்கள் பலர் துரத்தப்பட்டு விட்டார்கள். அவர்கள் ஆங்கிலத்தில் செய்யப் படும் பிரசங்கங்களைக் கிரகிக்கக் கூடவில்லையாம். இந்தியாவில் ஆங்கிலப் பிரசங்கங்களைக் கவனித்துக் கிரகிக்கக்கூடியவர்களாக ராணுவப் பயிற்சி பெறப் பலர் காத்துக்கொண்டிருக்கிறார்கள். ஆனால் கவர்ன்மெண்டார் அவர்களைச் சேர்த்துக் கொள்ள மாட்டார்கள். ஏனெனில் எந்த சமயத்திலாவது ராணுவத்தில் சம்பந்தப் பட்டிருந்த ஒரு கிராம வாசியின் பிள்ளையையோ அன்றிப் பேரனையோதான் கவர்ன்மெண்டார் பொறுக்கி எடுக்கிறார்கள். சேனாதிபதி வெகு பக்குவமாக மருந்தை வெல்லத்தில் மறைத்துக் கொடுப்பது போலப்பேசியிருக்கிறார். இங்கிலாந்திலுள்ள மூன்று ராணுவக் கலாசாலைகளில் இந்திய மாணவர்களைச் சேர்ப்பதைப் பற்றியும் வெகு ருசிகரமாகப் பேசியிருக்கிறார். இந்திய உத்தியோகஸ்தர்களால் நிருவகிக்கப் படக்கூடியபடி இந்திய ராணுவம் ஏற்படுவதற்கான வழிகள் ஒன்றையும் காணோம். ராணுவ வரவு செலவு திட்டத்தை உயர்த்தினாலொழிய ராணுவக் கலாசாலை ஏற்படுத்த முடியாதெனச் சொல்லுவது வஞ்சகப் பேச்சாகும். இதற்கு இப்போதுள்ள திட்டத்திலிருந்தே போதிய பணம் செலவழிக்கலாம். சோவியத் கவர்ன்மெண்டின் ராணுவ வரவுசெலவுத் திட்டம் உயர்ந்திருப்பதாக சேனாதிபதி கூறினார். நான் சோவியத்ருஷியாவுக்குச் சமீபத்தில் தான் போய்வந்தேன். இங்கிலாந்து அவர்கள் மீது யுத்தம் தொடுத்து விடுமோ என்ற பயம் அவர்களுக்கு எப்போதுமிருப்பதால் ராணுவச் செலவு அதிகமாக அவர்கள் செய்ய வேண்டி யிருக்கிறது. (கவர்ன்மெண்டு அங்கத்தினர்கள் சிரித்தார்கள்.) யுத்த மந்திரி ஆபீசில் நடக்கும் விஷயத்தை அறியாதவர்கள்தான் இப்போது இங்கு சிரிக்கிறார்கள். எப்படியும் ருஷியாவில் ருஷிய ராணுவம்தான் இருக்கிறது. ஆனால் இங்கிருப்பது கூலி ராணுவமாகும். அதை அந்நியர்கள் நிர்வகித்து வருகிறார்கள். அவர்கள் எங்கள் தேசத்தினரை அடக்க அந்தப் படையை உபயோகிக்கின்றனர். தங்களின் பாதுகாப்பாக எப்போதும் அந்நியர்களுக்குப் பணம் கொடுத்து வைத்திருப்பதை சுயமரியாதையுள்ள ஒரு இந்தியனும் ஒப்புக்கொள்ளமாட்டான்.

சீனாவுக்குச் சென்ற இந்திய ஸோல்ஜர்கள் பணம் சேர்த்து வைத்துத்தங்கள் வீட்டுக் கனுப்பினார்கள் என சேனாதிபதி கூறினார். அவர்கள் சம்பளத்தில் மிச்சஞ் செய்து வீட்டுக்கு அனுப்பினார்களா? அன்றி ஏழைச் சீனாக்காரர்களிடமிருந்து கொள்ளையடிக்க அவர்கள் அனுமதிக்கப்பட்டதால் கிடைத்த பணத்தை வீட்டுக்கு அனுப்பினார்களா?

ஸர் பேசில்:— அவர்கள் தாங்கள் சம்பளத்தில் மிச்சஞ்செய்து அனுப்பினார்கள்.

பண்டித நேரு:— இந்தியாவில் சம்பளத்தில் மிச்சஞ்செய்யவில்லையா? தங்கள் சொந்த ஊரில் மிச்சஞ்செய்ய முடியாதவர்கள் சீனாவில்மட்டும் மிச்சப்படுத்த முடிவதெப்படி?

சேனாதிபதி:— அது எவ்விதமோ எனக்குத் தெரியாது. அவர்கள் பணத்தை மிச்சப்படுத்தி வீட்டுக்கு அனுப்பியது உண்மை.

பண்டித நேரு:— ஏழைச் சீனாக்காரர்களின் மீது ஏவி விடப்பட்டதால் அவர்களுக்குக் கிடைத்த பணத்தை அவர்கள் அனுப்பினார்கள் என்பதுதான் உண்மை. (கவர்ன்மெண்டு அங்கத்தினர்கள் வாபீஸ் வாங்கிக் கொள்ளவேண்டுமெனக் கூக்குரலிட்டனர்.)

பண்டித நேரு:— நான் வாபீஸ் வாங்கிக் கொள்ளப்போவதில்லை. நான் ஆயிரந்தரம் வேண்டுமானாலும் அதைச் சொல்லுவேன். (வாபீஸ் வாங்கிக்கொள்ளவேண்டு மென்ற கூச்சல் அதிகமாகிவிட்டது.) தொண்டை கிழியும் வரை நீங்கள் கத்தினாலும் சரியே. நான் வாபீஸ் வாங்கிக்கொள்ளப்போவதில்லை. எந்தக் காரியத்துக்காக எங்கள் ஸோல்ஜர்களை உபயோகிக்க வேண்டுமோ அந்தக் காரியத்துக்காக அவர்கள் உபயோகிக்கப்படவில்லை. ஒரு நாட்டினர் தங்கள் சுதந்தரத்தை வற்புறுத்தியதற்காக அவர்களை அடக்க இந்நாட்டு ஸோல்ஜர்கள் உபயோகிக்கப்பட்டனர்.

மிஸ்டர்யங்:—அவர்கள் கொள்ளையடித்ததாக நீங்கள் சொன்னீர்கள்.

பண்டிதர் நேரு:— அவர்கள் கடமையை அவர்களின் விருப்பத்திற்கேற்பச் செய்யவில்லை. நீங்கள்தான் வற்புறுத்தி அவ்வாறு நடக்கும்படி செய்தீர்கள். இல்லாவிட்டால் அவர்கள் அவ்விதம் செய்ய மறுத்திருப்பார்கள்.

ஸர் பேசில்:- கொள்ளையடித்ததாகவோ கொள்ளை யடிக்க உத்தரவிடப் பட்டதாகவோ பண்டித மோதிலால் சொன்னதற்கு ஆதாரம் காட்ட முடியுமா?

பண்டித நேரு:— நான் ஆதாரமும் காட்டவேண்டுமோ?

ஸர் பேசில்:— தாங்கள் பொய் பேசினீர்கள்.

பண்டித நேரு:— மனித இயற்கைக்கும் நான் ஆதாரம் காட்டவேண்டுமோ? நான் சொன்னதை இன்னும் ஆயிரந்தரம் வேண்டுமானாலும் சொல்வேன்.

ஸர் பேசில்:— உண்மையில்லாமல் அவமதிப்பாகப் பேசுகிறீர்கள்.

பண்டித நேரு:— உங்களிடத்தில் மிருக சுபாவம் அதிகமாக விருப்பதால் மனித இயற்கை இன்னதென் உங்களுக்குத்தெரியவில்லை. நாங்கள் மறுத்தும் இந்தியப் படையை நீங்கள் அனுப்பியதற்குக் காரணம் அந்த மிருக சுபாவந்தான்.

கமிஷன் விசாரணை சம்பந்தமாக ஸர் ஜான் சைமன் வெளியிட்ட வேலை விபரத்துக் கேற்பவே இப்போது சேனாதிபதி அறிக்கையை வெளியிட்டிருக்கிறார். இந்த முறையைக் காங்கிரஸ் கட்சியினர் சற்றும் ஒப்புக்கொள்ள முடியாது.

ஜவாப்தாரியான கவர்ன்மெண்டுக்குச் சேராமல் ராணுவம் தனியாக வைக்கப்பட்டிருக்கிறது. இந்திய சமஸ்தானங்களைப் பற்றித் தனியாக விசாரணை நடைபெறுகிறது. இப்படியிருந்தும் அரசியல் கமிஷன் ஜவாப்தாரியான ஆட்சி அளிக்குமென்றும், அதனோடு ஒத்துழைக்க வேண்டுமென்றும் கேட்கப்படுகிறது. இந்த நிலையில் ஏதாவது அதிசயம் நடந்து அதன் மூலம் ஜவாப்தாரியான ஆட்சிக்கு இடம் ஏற்பட்டால் உண்டே ஒழிய வேறு வழியில்லை.

லாலாஜி:— கொடுத்திருப்பதை வாபீஸ் வாங்கிக்கொள்ளவும் கவர்ன்மெண்டுக்கு அதிகாரமிருக்கிறது.

பண்டித மோதிலால்:— பொது ஜ...களின் அபிப்பிராயத்தைப் புறக்க...தால் எத்தனையோ ஏகாதிபத்...தாழ்வடைந்து போயிருக்கின்ற...போது பிரிட்டிஷ் ஏகாதிபத்திய...ரின் அபிப்பிராயத்தைப் புறக்க...கின்றது. அத்தகைய நிலை இத...அதிக காலாகாதென நான்...செய்கிறேன்.

# வருமானவரி விஷயம்.

இந்தியாச் சட்ட சபையில் வரவு செலவு திட்டத்தைப் பற்றிய விவாதம் நிகழுகையில் ஸர் விக்டர் சாஸுன் பேசியதன் சாரம் வருமாறு:—

கவர்ன்மெண்டார் வரி வசூலிப்பதில் அனுஷ்டிக்கும் முறையைப்பற்றி நான் பேசப்போகிறேன். ரெவின்யூ அதிகாரிகளுக்கு விசேஷ அதிகாரங்களைக்கொடுக்கக் கூடாதென்று எதிர்க்கப்படுவதற்குப் பொக்கிஷ மெம்பர் வருமான வரித் திருத்த மசோதாவை ஒட்டிப் பேசியபடி காரியத்தில் நடத்தி வைக்குமாறு ஆக்ஞாபித்துவிட்டால் போதுமானது. துரதிர்ஷ்டவசமாகக் கொஞ்ச காலமாய்ப் பொக்கிஷ இலாகா சட்டப்படி தனக்குள்ள அதிகாரங்களைப் பூரணமாக உபயோகித்து வருகிறது. சட்டசபையிலும் தனிக் கமிட்டிகளிலும் கூறப்பட்ட உறுதிமொழிகளை அது லக்ஷியம் செய்யவில்லை, இந்த உறுதிகளைப் பற்றி விதிகளிலும் மான்யூலிலும் கூறப்பட்டிருப்பனவற்றைப் படித்துப் பார்த்தால் அந்த இலாகாவின் செய்கையிலிருந்து அவை எவ்வளவு மாறுபட்டிருக்கின்றன வென்பது விளக்கிவிடும். அநியாயமாக வரி விதிக்கப்படும் ஜனங்கள் கோர்ட்டுகளில் இந்த இலாகாவுக்கு எதிராக அந்த மான்யூலிலிருந்து ஆதாரம்காட்ட அனுமதிக்கப்படுவதில்லை, வருமானவரி இலாகாச் சட்டத்தில் உள்ள அக்ஷரங்களைப் பூராவாக அனுஷ்டிக்கத் தீர்மானித்துவிட்டால் அதை எதிர்த்துச் சமாளிக்கமுடியாது. இந்த இலாகாவில் மனச்சாக்ஷியை நடத்த ஒருவர் இருக்க வேண்டும். அவருக்குப் பூரண வேலையிருக்கும். அன்னியதேச வர்த்தகர் ஒருவர் இந்த தேசத்தில் நடத்தும் வியாபாரத்தில் அவருக்குமுழுவதும் நஷ்டமே ஏற்படுகிறதென்றும் பம்பாய் வர்த்தக வகுப்பினர் அனைவருக்கும் தெரிந்திருந்தபோதிலும்அவருக்கு லாபம் கிடைப்பதாக வரிவிதிக்கப்பட்டதை அன்று நான் தெரிவித்தேன். இப்போது அந்த டிமாண்டு கைவிட்டுவிடப்பட்டதாக அறிவிக்கப்படுகிறது. அந்த டிமாண்டே பிறந்திருக்கக்கூடாதென்பது என் வாதம். ஆமதாபாத்தில் தர்ம சொத்து என்பதற்காக வரி விலக்கப்பெற்றிருந்த ஒரு ஸ்தாபனம் உண்மையில் கல்விக்காகப் பணம் செலவழித்து வருகிறதாவென்று இந்த இலாகா விசாரிக்க ஆரம்பித்து ஆசிரியர்களை வரவழைத்து அவர்கள் போதிக்கும் பாடமுறை முதலியவற்றைப்பற்றிக் குறுக்கு விசாரணை செய்தது. இது வரி வசூலிக்கும் இலாகாவின் வேலையில்லை. கவர்ன்மெண்டுக்கு விரோதமாக உபயோகிப்பதற்காக வெடிகுண்டு தயாரிக்க அப்பள்ளிக்கூடத்தில் போதிக்கப்பட்டால்கூட, வரி வசூல் இலாகா அப்படிப் பணம் செலவழிக்கப்படுகிற தென்பதையறிந்துகொண்டு நின்றுவிட வேண்டியதுதான். அந்த மாதிரி வேலைகளை அடக்க உள்நாட்டு இலாகா முயற்சி யெடுத்துக்கொள்ள வேண்டும். ஆனால் வருமான வரி இலாகா அதிகாரிகள் உள்நாட்டு இலாகா செய்யவேண்டிய வேலைகளையும் சேர்த்துக் கவனிக்க அவகாச மிருந்தால் அவர்களுடைய தொகையைக் குறைத்துவிட வேண்டியதுதான். ௧௯௨0-ம் வருஷத்தில் உ௬உ அ0எ அ௩௪ ரூபாய் வசூலாயிற்று. இதற்கு ௧௯உ௭௪௭0 ரூபாய் செலவாயிற்று. இந்த வரவு செலவு திட்டத்தில் ௧௧௩௧௫அ000 ரூபாய் வருவாய்க்கு ௬௮௪000 ரூபாய் செலவு திட்டம் போடப்பட்டிருக்கிறது. அ... வருகாலத்தில் வருமான வரி இலாகாவின் செலவு ஒன்றுக்கு நான்கு மடங்காகிவிட்டது. ஆனால் வசூலாகும் தொகையோ குறைந்திருக்கிறது. வசூலைத் தீவிரமாக நடத்த அதிகமான பேர்களை நியமிக்காவிட்டால் இவ்வளவு தொகைகூட வசூலாயிருக்காதென்று வாதிக்கப்படலாம். இவ்வளவு தீவிரமாக வசூலித்தும் ௧௯௨௪-௨௫ விட ௧௯௨௫-௨௬ ல் ௨௭ லக்ஷம் குறைந்திருக்கிறது; ௧௯௨௬-௨௭ விட ௧௯௨௭-௨௮ ல் இன்னும் குறைந்திருக்கிறது. ஆகவே ஏற்றமதி அதிகரித்ததனால் லாபம் அதிகமாகக் கிடைத்ததென்பதற்கில்லை. வரி வசூல் திறமையாய் நடைபெறுவதற்காக அதிகப்படிச் செலவிற்கு இச்சபை அனுமதிகொடுக்க வேண்டுமாயினும், திறமை அதிகமென்று சாக்குச் சொல்லி வரி செலுத்துவோரை அனாவசியமாக ஹிம்ஸிக்காமல் பார்த்துக்கொள்ள வேண்டும். பம்பாயில் பலருடைய விவாதத்தால் விசாரணை முடிவில் வரி செலுத்துவோருக்குச் சாதகமாகவே முடிவேற்படுகிறது. இப்படி அதிகமாக விசாரணை நடத்துவது அனாவசியமாகும். வர்த்தகர்கள் தங்களுடைய சாதாரண வேலையைக் கவனிப்பதை இது பாதிக்கிறது. அவர்கள் தங்கள் நேரத்தை வருமானவரி அதிகாரிகளிடம் விஷயங்களை விளக்குவதில் அதிகமாகச் செலவழிக்க நேருகிறது. இந்த அனாவசியமான காரியங்களைக் காரணமாகக்கொண்டு அதிகப்படிச் செலவிற்குப் பணம் கேட்கப்படுகிறது. உத்தியோகஸ்தர்களின் தொகை அதிகரித்தால் மேலே உள்ளவர்களுக்கு அதிக அந்தஸ்தும் அதிகச் சம்பளமும் கிடைக்கிறது.

வருமான வரித் திருத்த மசோதாக்கள் ஒன்றும் புரியாத விதத்தில் சபை முன் கொண்டுவரப்படுகின்றன. ஆனால் அவை எல்லாம் அந்த இலாகாவின் அதிகாரங்களைப் பெருக்கிக்கொண்டே போகின்றன. கடைசியாக இப்போது இங்கிலாந்திலுள்ள நிலைமை இங்கு ஏற்பட்டுவிட்டது. வருமான வரி இலாகா உத்தியோகஸ்தர்கள் வேலையிலிருந்து விலகியபின் வருமானவரி ... என்ற ஓர் காரியாலயத்தை ஏற்படுத்திக் கொண்டு, வருமான வரி இலாகாவின் தொல்லையிலிருந்து தப்புவதற்கு வரி செலுத்துவோர்க்கு வழி சொல்லிக்கொடுத்து தாங்கள் உத்தியோகத்திலிருந்ததை விட அதிக வருமானம் பெறுகிறார்கள்.

ஆகையால் வருமானவரி இலாகா அதிகாரிகளின் செய்கைகளை எந்தெந்த வழிகளில் தடுக்கவேண்டுமென்று விசாரணை நடத்துமாறு பொக்கிஷ மெம்பரிடம் வற்புறுத்துகிறேன். அவர் தமது அபிப்பிராயங்களைத் தெரிவித்து ஒரு சுற்றுக்கடிதமனுப்பவேண்டும். வரி செலுத்துவோரைக் குற்றவாளியைப்போல் நடத்தக்கூடாதென்றும், அவரைத் திடீரென்று பிடித்துச் சோதிக்க முயலக்கூடாதென்றும் உத்தியோகஸ்தர்களுக்கு அறிவிக்கவேண்டும். இப்படித் தன்புறத்தினால் வரி செலுத்துவோருக்கும் வரி வசூலிப்போருக்கும் பரஸ்பரம் நல்ல சம்பந்தமிருக்காது.

அப்பீல் செய்யும்போது வரி செலுத்துவோர் வரிப்பணத்தைச் செலுத்திவிட வேண்டுமென்று கேட்க அதிகாரிகளுக்கு அதிகாரமிருக்கிறது. அப்பீல் தோற்றுவிட்டால் வரிப்பணம் வசூலாகாமற் போய்விடுமென்ற பயமிருந்தால் அப்படிக் கேட்கலாம். ஆனால் கௌரவம் ... பெரிய பழைய கம்பெனிகள் விஷயத்திலும் இப்படி வற்புறுத்துவது நியாயமல்ல. அப்பீல் ஜெயித்துவிட்டால் பாங்கு ... வட்டி சேர்த்து தொகை திருப்பிக்கொடுக்கப்படுகிறது. ஆனால் வட்டியில் வரி செலுத்துகிறவருக்கு நஷ்டமே ஏற்படுகிறது. ஏனெனில் அந்தப் பணத்திற்குச் சாதாரணமாக வேறு வழியில் ... அதிக வட்டி கிடைக்கும். கடன் வாங்கியிருந்தால் ... போது இரண்டு விகிதத்திற்கும் வித்தியாசம் அவருக்கு நஷ்டம். ஆகையால் அங்கீகரிக்கப்பட்ட ...ரிட்டிகளையாவது பாங்கு ஆதாரமாவது ஜாமீன் கொடுத்தால் போதுமென்று அனுமதிக்கவேண்டும். இதனால் கவர்ன்மெண்டுக்கும் நஷ்டமில்லை. என்னுடைய யோசனை ... க்கப்படுமென்று நம்புகிறேன்.

## அயலகம்.

இதுவரையில் கோவிட் பிரதேசத்தில் இந்தியப் படைகள் உபயோகிக்கப்படவில்லை என அறிவிக்கப்படுகிறது.

ஃ ஃ

இங்கிலாந்தின் ௧௯௨அ—௨௯ம் வருஷத்திய வரவு செலவு திட்டத்தில் ௫௯௦௦௦௦௦ பவுன் பிரிட்டிஷ் கப்பல் படைக்கென ஒதுக்கி வைக்கப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

சிரியா பிரதேசத்தில் பிரெஞ்சுக்காரர்கள் ஆயுதம் இல்லாது செய்ய முயற்சித்து வருகின்றனர். இதுவரை ௬௦௦௦௦ துப்பாக்கிகள் பறிமுதல் செய்யப்பட்டிருக்கின்றன.

ஃ ஃ

இங்கிலாந்து, புதிய உடன்படிக்கைசம்பந்தமாக எகிப்திய நாட்டிற்கு அனுப்பிய குறிப்பு அந்நாட்டைப் பெரிதும் அவமதிப்பதாக விருக்கின்றதென்று அங்கு கருதப்படுகிறது.

ஃ ஃ

ட்ரான்ஸ் ஜோர்டேனியாவில் வகாபியர்கள் பல கிராமங்களைக் கைப்பற்றிவிட்டதாகவும், பிரிட்டிஷ் கவசந்தாங்கிய மோட்டார் பீரங்கிகள் கோவிட் எனுமிடத்தைப் பாதுகாத்து வருவதாகவும் செய்தி எட்டுகிறது.

ஃ ஃ

நீர்மூழ்கிக் கப்பல்களை ஒழிக்க சர்வதேச ஒப்பந்த மொன்று செய்துகொள்ளலாமென மிஸ்டர் கெல்லாக் என்பவர் வெளியிட்ட யோசனையை அமெரிக்க அந்நியநாட்டுக் கமிட்டியினர் நிராகரித்துவிட்டனர்

ஃ ஃ

திருட்டுத்தனமாக ஹங்கேரிய நாட்டில் போர்த்தளவாடங்கள் இறக்குமதி செய்யப்படுவதாக ஏற்பட்டுள்ள தந்தியைப் பற்றி விசாரிக்க ஓர் கமிட்டி நியமிப்பதென சர்வதேசச் சங்க நிர்வாகசபையினர் முடிவு செய்திருக்கின்றனர்.

ஃ ஃ

துருக்கி குடியரசாங்கத்தார் அங்கோரா நகர் சீர்திருத்த ஏற்பாடு சம்பந்தமான விஷயங்கள் யாவற்றையும் நடத்த புதிய இலாக்கா ஒன்றை அமைக்கப் போவதாகவும் அதற்காக ஒவ்வோராண்டும் ௨௦௦௦௦௦ பவுன்கள் அனுமதிக்கப்படு மென்றும் தெரிகிறது.

ஃ ஃ

தென்னாப்பிரிக்கா பார்லிமெண்டு சபையில் ஆலோசனைக்கு மதுவிற்பனை மசோதா வந்ததும் இந்தியர்களைப் பாதிக்கும் பிரிவை நிராகரிக்குமாறு மந்திரி கேட்டுக்கொண்டதற் கிணங்க சபையினர் அதனை ரத்துச் செய்து விட்டனர். தொழிற்கட்சி அங்கத்தவர்மட்டும் அதற்குமாறாக அபிப்பிராயம் கொடுத்தனர்.

ஃ ஃ

கலகக்காரர்களென சாமோத்தீவில் கைதி செய்யப்பட்டவர்களை மன்னித்து விடுதலை செய்து விடுவதாக அத்தீவின் பிரதம அதிகாரி கூறியதை அவர்கள் ஏற்றுக்கொள்ளவில்லையாம். சாமோத்தீவை சாமோ ஜனங்களே ஆண்டுவர வேண்டுமென்றும் வெள்ளை அதிகாரிகள் ஆதிக்கம் கூடாதென்றும் கைதிகளின் தலைவர் தெரிவித்தாராம்.

ஃ ஃ

ஹங்கேரிய நாட்டிற்கும் ருமேனிய நாட்டிற்கும் சச்சரவை உண்டுபண்ணி அதன் மூலமாக உலக சமாதானத்தையே கெடுத்துவரும் பால்கன் பிரச்னையைப் பற்றி சர்வதேச சங்க நிர்வாக சபையார் பெரிதும் கவனித்துவருகின்றனர். ஹங்கேரியன் உரிமைகளைப்பற்றி விசாரித்து அறிவிக்க மத்தியஸ்த சபையுடன் மற்றுமிருவர் நியமிக்கப்பட்டிருக்கின்றனர்.

ஃ ஃ

இபினேசாத்என்பவர், தாம் கலிபாஎனக் கூறிவருகிறதாகவும், தாம் மதப்போராட்டத்தை நடத்த இதுதான் உற்றசமயமெனக் கருதியிருப்பதாகவும், கத்திமுனையில் மதமாறுதலை உண்டுபண்ண அவர் எண்ணியிருப்பதாகவும், இராக் பிரதேசத்தைச் சுற்றிலுமுள்ள முஸ்லீம்கள் இப்பொழுது வகாபியர்களாக மாறி மிகுந்த வெறிபிடித்தவர்களாக இருக்கின்றனரென்றும் செய்தி எட்டுகிறது.


(௪-ம் பக்கம் பார்க்க.)


## அடிகளின் உண்மை வாழ்வு.

பகுதி ௪.

அத்தியாயம் ௬௨.

என்னைப் பற்றிக்கொண்டிருந்த புளுரசி நோய் குணமடையாம லிருந்தது சிறிது கவலையையுண்டாக்கியது. எனினும் உள்ளுக்கு மருந்து சாப்பிடுவதால் குணமேற்படாதென்பதையும், உணவு வகையில் மாற்றங்கள் செய்து கொள்வதாலும் அத்துடன் வெளிப்பிரயோக மருந்துகள் உபயோகிப்பதாலும் மட்டுமே குணமடைய முடியுமென்பதையும் நான் அறிந்திருந்தேன்.

சுத்த போஜன விஷயத்தில் பிரக்யாதி பெற்றவரும், உணவுமுறைகளில் மாற்றங்கள் செய்து நோய்களைக் குணப்படுத்துபவருமான டாக்டர் அலினசன் அவர்களை வரவழைத்தேன். அவரை நான் ஏற்கனவே ௧அ௬0-ம் ஆண்டில் சந்தித்திருக்கிறேன். அவர் என்னை நன்றாக முற்றும் சோதித்துப் பார்த்தார். பால சாப்பிடுவதில்லை என்று நான் பிரதிக்ஞை செய்து கொண்டிருப்பதை அவருக்கு விளக்கிக் கூறினேன். உடனே அவர் எனக்கு உற்சாக மூட்டி, "நீங்கள் பால் சாப்பிடத் தேவையில்லை. சில தினங்கள்வரை நீங்கள் எவ்வித கொழுப்பான பண்டமும் புசிக்காம லிருக்கவேண்டு மென்பதே எனது கோரிக்கை" என்றார். பின்னர் பிரௌன் பிரெட் எனும் ரொட்டியையும் சக்கர வள்ளிக் கிழங்கு, முள்ளங்கி, வெங்காயம் முதலிய கிழங்கு வகைகளையும் கீரை வகைகளையும் பசையாகத் தின்றும், புதிய பழங்களையும் முக்கியமாகக் கிச்சிலிப் பழங்களையும் தின்றும் காலந் தள்ள வேண்டுமென்று யோசனை கூறினார். காய்கறிகளைச் சமைத்தலாகாது. அவற்றை நன்றாக மென்று சாப்பிட என்னால முடியவில்லையாயின் சிறிது சிறிதாக அவற்றை அரிந்து நான் உபயோகித்துக் கொள்ளலாம்.

மூன்று தினங்கள் அம் முறையை அனுஷ்டித்து வந்தேன். ஆனால் சமைக்கப்படாத காய்கறிகள் எனக்கு அவ்வளவாக ஒத்துப் போகவில்லை. இப் பரீட்சார்த்த முறையை நன்கு சோதித்துப்பார்க்கத்தக்கவாறு எனது உடல் நிலை இருந்து வரவில்லை. சமைக்கப்படாத காய்கறிகளை உபயோகிக்க எனக்குக் கூச்சமாயிருந்தது.

எனது அறையிலுள்ள ஜன்னல்களை நாள்முழுதும் திறந்து வைத்திருக்கும்படியும், இலேசான சூடுள்ள தண்ணீரில் ஸ்நானம் செய்யும்படியும், நோய்ப்பட்டிருக்கும் இடங்களில் எண்ணெய் தேய்த்துக்கொண்டு திறந்த வெளியில தினம் கறி நிமிஷங்கள் முதல் ௩0 நிமிஷங்கள் வரை நடக்கும்படியும் எனக்கு டாக்டர் அல்லின்ஸன் யோசனை கூறினார். இந்த யோசனைகள் என் மனதுக்குப் பிடித்தவைகளாகவிருந்தன.

நான் வசித்துவந்த அறையில் பிரஞ்சு நாட்டில் இருப்பதுபோன்ற ஜன்னல்கள் இருந்துவந்தன. அவற்றை நன்றாகத் திறந்து வைத்திருந்தால் மழைத்தண்ணீரெல்லாம் அறைக்குள் வந்துவிடும். காத்தாடி ஜன்னல்கள் திறக்கமுடியாதவைகள். எனவே புதிய சுத்தமான காற்று வரும்பொருட்டு அவற்றிலுள்ள கண்ணாடிகளை உடைத்துவிட்டேன். மழைத் தண்ணீர் உள்ளே வாராதவாறு ஜன்னல்களைச் சிறிது திறந்து வைத்தேன்.

இந்நடவடிக்கைகளெல்லாம் எனது உடல் நிலையை ஒரு சிறிது நன்னிலைக்குக் கொண்டுவந்தன. எனினும் பூரண சுகம் ஏற்படவில்லை.

ஸெலிலா ராபர்ட்ஸ் எனும் அம்மையார் எப்பொழுதாவது என்னை வந்து பார்ப்பார்கள். விரைவினில் நாங்களிருவரும் அன்பர்களாகிவிட்டோம். எப்படியாவது என்னைப் பாலருந்தும்படி செய்யவேண்டுமென அவ்வம்மையார் பெரிதும் விரும்பினர். நான் அதற்கு இணங்காததால் பாலுக்குச் சமத்துவமான வேறு ஒரு பொருளைக் கண்டு பிடிப்பதில் அவ்வம்மையார் தீவிரமாக ஈடுபட்டிருந்தார். பாலுக்குப் பதிலாக 'மால்டட் மில்க்' சாப்பிடலாமென யாரோ ஒரு நண்பர் அவ்வம்மையாரிடம் கூறியிருந்தார். அதில் பால் சம்பந்தப்பட்டிருக்கிறதா அல்லவா வென்பதை அவர் நன்கறிந்து கொள்ளாமலேயே, அவ்வம்மையாரிடம், அதில் பால் சிறிதும் சம்பந்தப்படவில்லை என்றும், அது பாலின் குணங்களுள்ள பொருட்கள் சேர்த்து ரசாயனமுறைப்படி தயாரிக்கப்பட்ட ஓர் பொருளாகுமென்றும் அவ்வன்பர் உறுதி கூறினர். எனது மதக் கோட்பாடுகளுக்கு ஸெலிலா சீமாட்டி அதிக மதிப்புக் கொடுத்திருந்தார் என்பதை நான் நன்கறிந்திருந்தேன். எனவே அவர்கள் கூறியவற்றை அப்படியே நம்பினேன். அப் பொடியைத் தண்ணீரில் கரைத்து உட்கொண்டேன். பாலைப்போன்ற ருசியுள்ளதாகவே அதுவுமிருந்தது. மால்டட் மில்க் பாட்டிலின் மேல் ஒட்டப்பட்டிருந்ததைப் படித்துப் பார்த்தேன். அதில் 'பாலிலிருந்து தயாரிக்கப் பட்டது' என்று எழுதப்பட்டிருந்தது. எனவே அது சாப்பிடுவதைக்கைவிட்டு விட்டேன்.

நான் கண்டுகொண்ட விஷயத்தை ஸெலிலா சீமாட்டியினிடம் கூறி, அதைப்பற்றிக் கவலைகொள்ளாதிருக்குமாறு தெரிவித்தேன். இதனையறிந்ததும் தான் அடைந்த அளவிலாத் துக்கத்தை என்னிடம் தெரிவிக்கும் பொருட்டு அவ்வம்மையார் விரைந்து வந்தார்கள். பாட்டிலின்மீது ஒட்டப்பட்டிருந்த சீட்டை அவரது அன்பர் படித்துப்பார்க்கவேயில்லை. இதைப் பற்றிக் கவலையடையாதிருக்குமபடி அவரிடம் கூறியதோடு, எனக்காக அவர் சிரமப்பட்டுத் தேடிக்கொண்டு வந்த பொருளை நான் உபயோகிக்க முடியாமலிருப்பதை முன்னிட்டு எனக் கேற்பட்டுள்ள வருத்தத்தையும் தெரிவித்தேன். தெரியாமல் பால் சாப்பிட்டதால் நான் மனக்குழப்ப மடைந்துவிடவில்லையென அவர்களிடம் உறுதி கூறினேன்.

அவ்வம்மையாருடன் நான் பழகிய இதர இனிமையான விருத்தாந்தங்களை யெல்லாம் நான் குறிப்பிடாது விட்டுச் செல்லவேண்டும். எவ்வளவோ கஷ்டங்களும் துன்பங்களும் நான் அனுபவித்து வந்த காலத்தில் எனது சந்தோஷத்திற்கும் சுகத்திற்கும் பெரிதும் காரணமாகப் பல அன்பர்கள் இருந்து வந்திருக்கின்றனர். பக்தியுள்ளவர்கள் துன்பத்தை இன்பமாக்கும் கடவுளது அருளை இவ்வன்பர்களிடம் காண்பார்கள்.

மறுமுறை டாக்டர் அல்லின்ஸன் வந்தபொழுது தனது நிபந்தனைகளைச் சிறிது தளர்த்தினர். கொழுப்புப் பதார்த்தமாக, வேர்க்கடலை எண்ணெயையாவது ஒலிவ எண்ணெயையாவது சேர்த்துக் கொள்ளலா மென்றும் எனக்கு விருப்பமாயின் காய்கறிகளைச் சமைத்துச் சோற்றுடன் சாப்பிடலாமென்றும் கூறினர். இம்மாற்றங்களெல்லாம் எனக்கு உகந்தவைகளாகவிருந்தன எனினும் அவற்றால் எனக்குப் பூரண சுகமேற்படவில்லை. இன்னும் எனது உடல் நன்கு பராமரித்துப் பாது காக்கப் படவேண்டிய நிலைமையிலேயே இருந்து வந்தது. பெரும்பாலும் படுத்த படுக்கையாகவே இருந்துவந்தேன்.

டாக்டர் மேத்தா அவர்கள் எப்பொழுதாவது என்னை வந்து பரிசோதித்துப் பார்ப்பார். அவரது யோசனைப் படி நடப்பின் எனது நோயைக் குணப் படுத்திவிடுவதாகக் கூறுவார்.

விஷயங்கள் இவ்வாறாக நடந்து கொண்டிருக்கையில் ஓர் நாள் மிஸ்டர் ராபர்ட்ஸ் என்னைப் பார்க்கவந்தார். எனது தாய்நாட்டிற்குத் திரும்புமாறு என்னைப் பலமாக வற்புறுத்தினர். 'இந்தநிலைமையில் தாங்கள் நெட்லிக்குச் செல்லமுடியாது. தாங்கமுடியாத குளிர்காலம் இனித்தான் வரப்போகின்றது. இந்தியாவுக்கு உடனே திரும்பும்படி உங்களுக்கு யோசனை கூறுகிறேன். ஏனெனில் அங்கு சென்றலதான் உங்களது நோய்முற்றும் குணமடையும், உங்களுக்குப் பூரண சுகம் ஏற்பட்ட பின்னரும் போர் நிகழ்ந்து கொண்டிருப்பின் போரில் உதவி செய்ய உங்களுக்கு எவ்வளவோ சந்தர்ப்பங்கள் ஏற்படக்கூடும். நீங்கள் இதுவரை செய்துள்ள பணி எவ்வகையிலும் குறைந்ததல்ல என்பதே எனது அபிப்பிராயம்." என்றார்.

அவரது யோசனையை அங்கீகரித்து, இந்தியாவிற்குத் திரும்பும் ஏற்பாடுகளெல்லாம் செய்யத் தலைப்பட்டேன்.

## அயலகம்.

(௩-ம் பக்கத் தொடர்ச்சி.)

ஆகாயவிமான விஷயத்தில் எல்லா தேசங்களை விட இங்கிலாந்தே முன்னணியில் நிற்கின்றதாம்.

ஃ ஃ

ஆஸ்திரியாவில் வேலையில்லாத் திண்டாட்டம் அதிகப்பட்டுவிட்டதால் ஆஸ்திரியர்கள் பாரசீகநாட்டில் குடியேறயோசித்து வருவதாகச் சொல்லப்படுகிறது.

ஃ ஃ

அடுத்த ஆயுதப் பரிகாரண பூர்வாங்க மகாநாட்டிற்குத் துருக்கியையும் அழைப்பதென்று போலந்துதேசப் பிரதிநிதி கொண்டுவந்த தீர்மானம் சர்வதேசச் சங்க கமிட்டியாரால் ஒப்புக்கொள்ளப்பட்டது.

ஃ ஃ

ஜோஹானஸ்பர்கிலுள்ள டிராம் வண்டிக் கம்பெனியார், இந்தியர்களும் மற்ற கறுப்பு ஜாதியினரும் டிராம் வண்டிகளின் மேல்தட்டில் முதல் பெஞ்சியில் மாத்திரம் உட்காரவேண்டுமென உத்தரவிட்டிருக்கின்றனர்.

ஃ ஃ

சமீபத்தில் முஸ்லீம் தேசங்களில் பெரும் கலகமொன்று ஏற்படுமென்றும், ஆப்கன் அமீர் இச்சமயம் இங்கிலாந்திற்கு வருகிறபடியால் தர்ம சங்கடமான நிலைமை ஏற்பட்டிருக்கிறதென அரசியல் வாதிகள் கருதுகிறதாகவும் தெரிகிறது.

ஃ ஃ

எகிப்திய மந்திரி சபையில் பெரியதோர் குழப்பம் ஏற்பட்டிருப்பதாகவும் மந்திரி சபைத் தலைவரான டிபிக் பாஷா என்பவர் முதன் மந்திரிப் பதவியை ஏற்க மறுத்துவிட்டதாகவும், அந்நாட்டில் ஏற்பட்டிருந்த மாணவர்களது வேலை நிறுத்தம் இப்பொழுது தீர்ந்துவிட்டதாகவும் ஓர் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

ஜிப்ரால்டரைச் சேர்ந்த லாலினி எனுமிடத்திலுள்ள சுங்கவரிக் காரியாலயத்தில் சோதனை நடந்த காலத்தில் ஏற்பட்ட கலவரத்தில் துப்பாக்கிப் பிரயோகத்தினால் உயிர் துறந்தவர்களின் பிரேத ஊர்வலம் நடந்தபொழுது ௬௦௦௦ ஸ்திரீகள்கூடச் சென்றனரென்றும், அவர்கள் கையில் கறுப்புக்கொடிகள் தாங்கிச் சென்றதுடன் தங்களுக்கு நியாயம் வழங்கவேண்டுமென்று ஆரவாரம் செய்துகொண்டே போனதாகவும், மேயர், சிவில் இராணுவ அதிகாரிகள் ஆதியோரின் தலைமையில் ௩௫௦௦௦ ஜனங்கள் கூடச்சென்றனரென்றும், அச்சம்பவத்தைப் பற்றி இராணுவ அதிகாரிகள் விசாரணை செய்துவருவதாகவும் கூறப்படுகிறது.

ராளென் செயும்! வினைதானென்
செயும்! எனைநாடி வந்த
கோளென் செயும்! கொடுங்கூற்
றென் செயும்! குமரேசரிரு
தாளும் சிலம்பும் சதங்கையும்
தண்டையும் ஷண்முகமும்
தோளும் கடம்பும் எனக்கு முன்
னேவந்து தோன்றிடினே.

—கந்தரலங்காரம்.

## குமரன், காரைக்குடி.

பிரபவ - ௵ பங்குனி - மீ ௩ - ௨

# திராவிட ஹிந்துக்கள்.

தில்லியில் கூடியுள்ள சர்வகக்ஷி மகாநாட்டில் கலந்துகொள்ளும்படி சென்னைத் திராவிட மகாஜன சபைக்கு ஒரு கடிதமெழுதியிருக்கின்றனர், அதற்குப் பதிலாக ஷை சபைத் தலைவர் எழுதியுள்ள கடிதத்தில் தங்கள் சமூகத்தினரை உயர்த்தும் பொருட்டுக் கூறியிருக்கின்றார். அவற்றுள் முக்கியமான சிலவற்றை ஈண்டெடுத்துக் காட்டுகிறோம்:—

(௧) தாழ்ந்த வகுப்பினர்கள், பஞ்சமர்கள், ஆதித்திராவிடர்கள் எனும் பெயர்களை அழித்துவிடவேண்டும். இப்பெயர்கள் நாங்கள் பொது ஹிந்துக்களல்லவென்று பிரித்துவிடுகின்றன. ஹிந்துமதத்திலிருக்கும் பல வகுப்புக்களிலொன்முக எங்களையும் கருதவேண்டும். ஆகையால், எங்களைத் திராவிட ஹிந்துக்களென்று அழைக்க வேண்டும். எங்களைத் திராவிட ஹிந்துக்களென்று அழைத்தால் (௧) நாங்கள் ஹிந்துக்கள்தானென்று கருதிக்கொள்வோம். (௨) மற்ற ஹிந்துக்களும் எங்களை ஹிந்து மதத்தினர்களென்று கருதுவார்கள். (௩) கவர்ன்மெண்டார் நாங்கள் ஹிந்துக்களல்லவென்று கருதி மற்ற ஹிந்துக்களிடமிருந்து எங்களைப் பிரிக்க வொண்ணுமல் போகும். பூஜை செய்யும் பூசாரிகளைத் தவிர, மற்ற எல்லா ஹிந்துக்களையும்போல எங்களை ஹிந்துக்களுடைய கோவில் யாவற்றிலும் யாதொரு தடையுமின்றிப் போக சம்மதிக்க வேண்டும். கடவுளுக்கெதிரில் மற்ற ஹிந்துக்கள் நாங்கள் அவர்களுக்குச் சமமென்று அறிவார்களேயாகில், பிறகு எங்களுடைய பிரயாசையால் நாங்கள் மற்ற ஜனங்களுக்குச் சமமென்பதை ஸ்தாபித்துக்கொள்வோம். இதன் பலனுக சகோதரத்வமுண்டாகும்.

(௨) கவர்ன்மெண்டார் எங்களை ஸ்தல ஸ்தாபனங்களில் நியமிப்பதென்பதை நாங்கள் வெறுக்கின்றோம். லோக்கல் போர்டுக்கும் சட்ட சபைக்கும் எங்களைத் தேர்ந்தெடுக்க வேண்டும்.

(௩) எங்கள் குழந்தைகளுக்குத் தனியாகப் பள்ளிக்கூடமிருத்தல் கூடாது. கவர்ன்மெண்டுப்பள்ளிக்கூடமானாலும் சரி, கவர்ன்மெண்டால் ஆதரிக்கப்பட்ட பள்ளிக்கூடமானாலும் சரி, எல்லாப்பள்ளிக்கூடங்களிலும் எங்களைச் சேர்த்துக்கொள்ள வேண்டும். படிப்பதற்காகச்சாப்பாடும், விடுதி வசதியும், சம்பளமில்லாமல் கல்வியும் எங்களுக்குக் கிடைக்கவேண்டும்.

இத்தீர்மானங்கள் ஆழ்ந்து சிந்திக்கத்தக்கனவாகும். 'தாழ்ந்த வகுப்பார்' 'தாழ்த்தப்பட்டவர்' என்பதுபோன்ற பெயர்களை அவர்கள் விரும்பவில்லையென்பதொருதலை. அந்தப் பெயரையே கொண்டு எப்போதும் அவர்கள் இருத்தல் வேண்டுமென்பதை எவ்விதத்தாலும் வற்புறுத்த முடியாது. அம்மாதிரியான ரிக்கார்டுகளை இனியும் தயாரித்துக்கொண்டிருப்பது முறையுமன்று. "திராவிட ஹிந்துக்கள்" எனும் பெயர் பெரிதும் ஏற்றுக்கொள்ளத்தக்கதாகும். நமது நாட்டில் ஆதித்திராவிடர்களைப் பற்றிய பிரச்னை மிகப் பெரிதாக இருப்பதை ஒவ்வொருவரும் உணர்வர். உலகியலையும் தேசிய வாழ்வையும் விரும்பும் ஒவ்வொருவரும் தாழ்த்தப்பட்டவரை உயர்த்தவேண்டுமென்பதை மறுப்பதில்லை. இந்நிலையில் அவர்களை வேற்றுமைப்படுத்தாமல் சமத்துவமாகக் கொள்ளவேண்டியது இன்றியமையாததாகும். மற்ற ஹிந்துக்கட்கு உள்ள உரிமை தங்கட்கும் வேண்டுமென்று கேட்பதை நியாயமான மனமுடைய எவரும் மறுக்கமுடியாது, இவற்றுக்கு மேலாகக் குழந்தைகளின் கல்வி விஷயத்தில் யாவருங் கண்ணோட்டஞ் செலுத்துதல் வேண்டும். அக்குலத்தார் பல தலைமுறைகளாகப் பிறருடைய சில சிறு நன்மையின்பொருட்டு பெருந்துயரடைந்து வருகின்றனர். சாதாரணமாக மக்கள் மேன்மையுறுதற்குக் காணப்பட்டுள்ள எல்லா வழிகளிலும் இடமின்றி ஒதுக்கித் தள்ளப்பட்டிருக்கின்றனர். இதற்கு விமோசனம் செய்யப்படல் வேண்டுமென்பதை இரக்கமுடைய ஹிந்துக்களும் ஏனைய மதத்தினருங்கூட விழைவுறுவது குறிப்பிடத்தக்கதாகும். இவ்விஷயம் சர்வகட்சி மகாநாட்டில் ஆக்ஷேபணையின்றிக் கவனிக்கப்படுமென்று நம்புகிறோம்.

## எண்டிசைக் காட்சி.

### எவருடைய பணம்?

இந்தியாவிற்கு சைமன் குழுவினரது விசாரணையால் ஏதேதோ நலன்கள் விளையப்போவதாக நவிலப்படுகின்றது. நலன்கள் விளையப்போகின்றனவா அல்லது தீமைகள் விளையப்போகின்றனவா அல்லது இரண்டுமில்லையா யென்பது ஓர் புறமிருக்க, அக்குழுவினரது வரவால் இந்திய நாட்டார் ஏராளமான பொருட்செலவு செய்யவேண்டியிருக்கின்றதென்பதை நாம் கண்கூடாகக் கண்டு வருகின்றோம். இவ்விஷயத்தில் மக்களிடை எவ்வித அபிப்பிராய பேதமும் இராதென்பது திண்ணம். இக்குழுவினர் பம்பாய் வந்திறங்கிய அன்று பற்பல விடங்களில் வேலை நிறுத்தம் நடந்ததையும் சிற்சில விடங்களில் கலகங்கள் நிகழ்ந்ததையும் அனைவரும் அறிவர். இக் கலகங்களுக்குக் காரணமா யிருந்தவர்கள் யாரென்பதைப்பற்றியாவது, எவரது அஜாக்ரதையால் இக் கலகங்கள் ஏற்பட்டனவென்பதைப்பற்றியாவது நாம் இப்பொழுது ஆராயத் தேவையில்லை. ஆனால் சைமன் கமிஷன் அங்கத்தவர்கள் சென்னைக்கு விஜயம் செய்ததை முன்னிட்டுப் போலீஸ் பந்தோபஸ்திற்காக ரூ. ௭0 ஆயிரம் செலவழிக்கப் பெற்றிருப்பதாகச் சொல்லப்படுகிறது. இச்செய்தி உண்மையாயிருக்குமாயின் அரசினர் கண்மூடித்தனமாக இவ்வளவு ஏராளமான தொகையை, நாட்டிற்கு எவ்விதப் பயனையும் அளியாத ஓர் விஷயத்தில் செலவு செய்தது பெரிதும் கண்டிக்கத்தக்கதாகும். இப் பணம் ஏழை இந்தியர்களிடமிருந்து 'வரி' என்ற பெயரால் வசூலிக்கப் பட்ட பணமாகும். எனவே அதனை வரி செலுத்துவோரின் நலனை முன்னிட்டுச் செலவிடுவதே நியாயமும் ஒழுங்குமாகும். பிரஸ்தாப செலவால் வரி செலுத்துவோருக்கு எள்ளளவேனும் பயனிருப்பதாக எவரேனும் துணிந்து கூறமுடியுமா? ஆகவே இது வீண் செலவன்றோ? சைமன் கமிஷனரது விஜயத்தால் தமிழகத்தார் முதலாவதாக அடையும் பயன் இதுவே போதும்! இன்னும் இதுபோன்ற நலன்கள் என்னென்ன கிட்டப்போகின்றனவோ?

### பயனென்ன?

சில ஆண்டுகள் முன்னர் இராணுவத்தை இந்தியர் மயமாக்குவது பற்றி யோசித்து அறிவிக்கும் பொருட்டு ஓர் கமிட்டி நியமிக்கப்பட்டது. அக்கமிட்டியே ஸ்கீன் கமிட்டி என்பதாகும். அக்கமிட்டியினர் ஒருமனப் பட்டுச் செய்துள்ள சிபார்சுகளை அமுலுக்குக் கொண்டுவர வேண்டுமென இந்தியச் சட்டசபையில் ஓர் தீர்மானமும் நிறைவேற்றப் பட்டது. ஆனால் இந்தியா அரசாங்கத்தார் அத் தீர்மானத்தைக் காற்றுவாக்கில் பறக்கவிட்டு விட்டனர். அக்கமிட்டியினர் செய்துள்ள முக்கியமான சிபார்சுகளை நிராகரித்து விட்டனர். இது குறித்து யோசிக்கும் பொருட்டு இந்தியச் சட்டசபையின் இதர நடவடிக்கைகளை ஒத்திவைக்க வேண்டுமென ஜனுப் ஜின்னு அவர்கள் சில தினங்கள் முன் சட்டசபையில் ஓர் தீர்மானம் கொண்டு வந்தார். அது பற்றிச் சபையில் பெரும் விவாதம் நிகழ்ந்தது. இறுதியில் ஜனுப் ஜின்னு அவர்களது தீர்மானம் பெரும்பான்மையோரால் ஏற்றுக்கொள்ளப் பட்டு நிறைவேறியது. இதினின்றுமாவது இந்திய அரசினர் இந்திய ஜனங்களின் மனப்பான்மை எவ்வாறிருந்து வருகின்றதென்பதை உணர்ந்து கொண்டிருக்கலாம். இந்தியாது பணத்தை லட்சக் கணக்காக விரயம் செய்து பெறப்பட்ட சிபார்சுகளை—தாமே நியமனம் செய்த கமிட்டியின் சிபார்சுகளை—அரசினர் ஏற்றுக்கொள்ளவில்லையாயின் அரசினரது மனப் பான்மை எவ்வாறு இருந்து வருகின்றதென்பதற்கு வேறு சான்று வேண்டுமோ? இதுவொன்றே போதாதா? இப்பொழுது நிறைவேற்றிய தீர்மானத்தை அரசினர்மீது கொண்டுவரப் பட்ட கண்டனத் தீர்மானமென்றே கொள்ள வேண்டும். இத்தீர்மானம் நிறைவேறினும் நிறைவேறுதிருந்தாலும் அரசினர் அதனைப்பொருட் படுத்தமாட்டார்கள் என்பதைக்கடந்த கால அனுபவங்கள் விளக்குகின்றன. இவ்வித நிலையில் இந்தியாவிற்கு ஜவாப்தாரியான ஆட்சி வழங்கப் போகிறோமென்றும் இந்தியர்களை அப்பாட்டையில் பழக்கி வருகிறோமென்றும் பிரிட்டிஷார் கூறுவதற்கு ஏதேனும் பொருளுண்டோ?

## தந்திச் செய்தி.

சைகோன், பங்குனி-மீ உ௨

| | |
|---|---|
| உண்டியல் விலை | நூற்று நாற்பத்தொன்று. |
| சிங்கப்பூர் வட்டம் | பத்து. |

பினங்கு பங்குனிமீ உ-௨

| | |
|---|---|
| உண்டியல்விலை | நூற்று ஐம்பத்து நான்கு. |
| ஈயம் விலை | நூற்றுப்பதினைந்து. |
| ரப்பர் விலை | ஐம்பது. |

## கப்பற் செய்தி.

'டைரியா'க் கப்பல் நாளிது பங்குனித் திங்கள் நான்காம் நாள் வெள்ளிக் கிழமையன்று சென்னையிலிருந்து இரங்கூனுக்குப் புறப்படுகிறது.

'எதியோப்பியா'க் கப்பல் நாளிது பங்குனித் திங்கள் ௫-ம் நாள் சனிக்கிழமையன்று நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

'ரோனு'க் கப்பல் நாளிதுபங்குனித் திங்கள் ௧௩-ம் நாள் ஞாயிற்றுக்கிழமையன்று நாகபட்டணத்திலிருந்து மலாய் நாட்டிற்குப் புறப்படுகிறது.

## பலதிரட்டு.

### கைது செய்யப்பட்டார்.

இரங்கூனிலிருந்து வெளி வரும் 'தேசோபகாரி' எனும் தமிழ் வாரப் பத்திரிகையின் ஆசிரியர் திரு கொ. நா. சுப்பய்யா நாயுடுவும், உதவி மானேஜர் திரு செல்லம் பிள்ளையும் "நாம் நாய்களா?" என்ற துண்டுப் பிரசுரத்தை வெளியிட்டதாக அவர்கள்மீது வாரண்டு பிறப்பிக்கப்பட்டுத் திரு செல்லம் பிள்ளை கைது செய்யப்பட்டு ரிமாண்டில் வைக்கப்பட்டிருக்கிறார்.

ஃ ஃ

### பணம் இல்லை.

சென்ற செவ்வாய்க்கிழமையன்று இந்தியச் சட்டசபையில் வரவு செலவு திட்டத்தைப்பற்றிய விவாதம் நடந்தது. சில்லரைச் செலவு மான்யத்தில் சைமன் கமிஷனுக்கு என ஒதுக்கப்பட்டிருந்த ௩௪0000 ரூபாயை அனுமதிக்க மறுப்பதாக பண்டிதர் நேரு பிரேரேபித்தார். சிறிது விவாதிக்கப்பட்டு தீர்மானம்நிறைவேறியது. தீர்மானத்திற்குச் சாதகமாக ௬௮ பேர்களும் பாதகமாக ௫௪ பேர்களும் ஓட்டுக்கொடுத்தனர். இது அரசினருக்குப் பெருந் தோல்வியாகும்.

ஃ ஃ

### இராஜிநாமா.

சென்னையரசாங்கச் சட்ட உறுப்பினராக சென்ற சனிக்கிழமையன்று வேலை ஒப்புக்கொண்ட திருவாளர் டி. ஆர். வெங்கட்டராம சாஸ்திரியார் சென்ற செவ்வாய்க்கிழமையன்று தனது பதவியை ராஜிநாமாச் செய்து விட்டார். சிற்சில இலாகாக்கள் அவரிடமிருந்து வேறு அங்கத்தவருக்கு மாற்றப்பட்டதே அவரது ராஜிநாமாவிற்குக் காரணமென்று சொல்லப்படுகிறது. தற்காலிகமாக அப் பதவிக்கு மிஸ்டர் ஏ. ஒய். ஜி. காம்பல் நியமிக்கப்பட்டிருக்கிறார். டாக்டர் சுப்பராயனுக்கு இப் பதவி கிடைக்கக்கூடுமென்று வதந்தி யுலாவுகிறது.



## கடிதங்கள்.

### அவதூறு வழக்கு.

கும்பகோணத்திலிருந்து வெளிவரும் 'பாரதமித்திரன்' எனும் தமிழ் வாரப்பத்திரிகையின் ஆசிரியரான திரு சத்திவேல்பிள்ளை என்பார்மீது, அவ்வூரைச் சேர்ந்த திரு சிவசாமி பிள்ளை என்பவர் அப்பத்திரிகையில் அவதூறன வியாஸங்கள் தன்னைப்பற்றி வந்ததாக இந்தியன் பினல் கோடு ௫00-வது பிரிவுப்படி அவதூறு வழக்குத் தொடர்ந்திருக்கிறார். இவ்வழக்கு விசாரணைகாலத்தில் எதிரி கோர்ட்டில் ஆஜராயில்லாததால் அவர்மீது வாரண்டு பிறப்பிக்கப்பட்டது. இதையறிந்த திரு சத்திவேல் பிள்ளை நாளிது மாதம் ௧-௨ மாஜிஸ்திரேட் முன் ஆஜராகி ரூ. ௫00-க்கு இரு ஜாமீன்கள் கொடுத்து விடுவிக்கப்பட்டிருக்கிறார், என ஒரு நிருபர் அறிவிக்கிறார்.

ஃ ஃ

### புதுவயல்.

மாதக்கூட்டம்:—இவ்வூர் ஸ்ரீசரஸ்வதி சங்கத்தின் ஐந்தாவதாண்டு பதினேருவது மாதக் கூட்டம் நிகழும் மாசிமீ உ௮-௨ ஞாயிற்றுக் கிழமை மாலை ௪ இ-மணிக்குமேல் திரு. ட. என். நடேசராவ் அவர்கள் தலைமையின்பாற் கூடியது. அவ்வமயம் திருவாளர்களான கா. ராமசாமி. சித. ராம. குமரப்பன், கும. ராம. குமரப்பன், பழ. அருணசலம், சுப. இராமநாதன், ரு. பழ. ராமனுதன்செட்டியார். வீர. பழ. வினைதீர்த்தான் செட்டியார், சோம. தியாகராஜன் இவர்கள் முறையே 'சிவபிரானின் ஒப்பற்ற வலிமை' 'கொல்லாமை' 'ஆக்கை நிலையாமை' 'இன்சொல்' 'கோதாட்டொழி' 'நளாயினி சரித்திரம்' 'திருத் தொண்டர்' 'அன்பு' எனும் விஷயங்கள் பற்றி அழகாக எடுத் துரைத்தார்கள். பின்னர் தலைவரவர்கள் அழகாக முடிப்புரை கூறினார்கள், என சங்கத்தலைவர் தெரிவிக்கிறார்.

ஃ ஃ

### தேவகோட்டை.

சரஸ்வதி வாசகசாலை:— பிரபவ ஆண்டு மாசித்திங்கள் உ௫-ம் நாள் வியாழக்கிழமை மாலை ஐந்து மணிக்கு திருவாளர் இரட்டினபபுலவர் முருகன் அவர்கள் தலைமையில் திரு. வெ. மு. சோம. இராமநாதச் செட்டியார் அவர்கள் அந்நியநாடு சென்று வருவதை முன்னிட்டு ஓர் பிரிவு உபசாரம நடைபெற்றது. அதுகாலை திருவாளர்களான திருச்செந்தூர் மஹாராஜ பிள்ளையவர்களும், வீர. சொக்கலிங்கச் செட்டியார் அவர்களும், அன்பர் இராமநாதச் செட்டியார் இவ்வாசக சாலையில் அன்புகூர்ந்து தொண்டாற்றியதைப்பற்றிப் புகழ்ந்து பேசினார்கள். அன்பர் நலனுடன் வரவேண்டுமெனக் கடவுளைப் பிரார்த்திக்கப்பெற்றது. பின் இராமநாதச் செட்டியார் அவர்கள் வாசகசாலை முன்னேற்றமடையவேண்டிய விஷயத்தைப்பற்றி சில இன்சொற்கள் பகர்ந்தார்கள். தலைவர் அவர்கள் முடிவுரை கூறியதும ஸ்ரீசொர்ணமூர்த்தி பெண்பாடசாலை மாணுக்கிகளால் தேவாரம் திருப்புகழ் முதலியன மிக இனிமையாகப் பாடப்பெற்று கூட்டம இரவு ஏழு மணிக்கு இனிது நிறைவெய்தியது.

விருந்து:-அன்பர் திரு அ.வெ.தியாகராஜா அவர்கள் தம்மனைவி மக்களுடன் பர்மா நாடுசென்று வந்தமையைப் பாராட்டி நமது வாசகசாலையின் சார்பாக ஓர் நல்விருந்து அளிக்கப்பெற்றது. இவ்விருந்திற்கு உள்ளூரிலிருந்தும் வெளியூர்களிலிருந்தும் பல அன்பர்கள் வந்திருந்தார்கள், எனக் காரியதரிசி திரு. சி. மு. அரு. வீர. சொக்கலிங்கன் எழுதுகிறார்.

## தாயகம்.

வங்காளச் சட்டசபையில் செலவினங்களைக் குறைக்க வேண்டுமென்று ௨௭0 பிரேரணைகள் அனுப்பட்டிருக்கின்றனவாம்.

ஃ ஃ

நடைபெற விருக்கும் ஓர் உபதேர்தலில் கல்கத்தா கார்ப்பொரேஷனுக்கு சுபாஷ் சந்திரபோஸ் ஓர் அபேட்சகராக நிற்கப் போகிறாராம்.

ஃ ஃ

பெங்களூரில் இவ்வாண்டு வெயில் மிகக் கொடுமையாக விருக்கிற தென்றும் ஜலக் கஷ்டம் தாங்க முடியவில்லை யென்றும் சொல்லப்படுகிறது.

ஃ ஃ

கல்கத்தாவிலுள்ள லட்லோ சணல் ஆலை சூப்பரின்டெண்டெண்டு ஒரு தொழிலாளியை அடித்ததை முன்னிட்டு உ௫00 பேர் வேலைநிறுத்தம்செய்திருக்கின்றனராம்.

ஃ ஃ

இரங்கூனைச் சேர்ந்த மேர்தானில் சில தினங்கள் முன் ஓர் பெரிய அரிசி மில்லில் தீ விபத்தேற்பட்டு பல லட்சம் ரூபாய்க்குச் சேதமேற்பட்டிருப்பதாகக் கூறப்படுகிறது.

ஃ ஃ

பம்பாய் பிச்சைக்காரர்கள் சட்ட அனுஷ்டானத்தில் ஜாதிவித்தியாஸம் பாராட்டப் படுவதாகவும், ஐரோப்பியருக்குக் காட்டப் படும் சலுகை இந்தியருக்கும் காட்டப்பட வேண்டுமென்றும் திரு நரிமான் கூறுகிறார்.

ஃ ஃ

பம்பாயைச் சேர்ந்த காண்டாலாவில் டாடா கம்பெனி ஊழியர்கள் கலகமேற்பட்டு பல வீடுகள் கொளுத்தப்பட்டுவிட்டதாகவும் ௫0 பேர்களுக்குக் காயமும் உயிர்ச் சேதமும் ஏற்பட்டிருப்பதாகவும் ஓர் செய்தி கூறுகிறது.

ஃ ஃ

பர்டோலி வரிகொடா இயக்கம் நாளுக்கு நாள் ஓங்கிவளர்ந்து கொண்டுவருகிறது. அரசாங்கத்தார் கிராம ஜனங்களுக்கு விரோதமாக ஏதாவது நடவடிக்கைகள் எடுத்துக் கொண்டால் போலீஸ் படையினர் ஜனங்கள் பக்கமே இருப்பார்களென ஓர் செய்தி கூறுகின்றது.

ஃ ஃ

தேச நலத்திற்காகவும், மாணவர்களது முன்னேற்றத்திற்காகவும் கிரமமான எல்லைக்குட்பட்டு சமூக, ராஜீயக் கல்வி வேலைகளை நடத்த வங்காள மாணவர்களின் ஸ்தாபன மொன்றை ஏற்படுத்த வேண்டுமென கல்கத்தா மாணவர்கள் தீர்மானித்திருக்கின்றனர்.

ஃ ஃ

மேட்டூர் அணைத்திட்டத்திற்கு மின்சார சக்தி சப்ளை செய்ய மைசூர் அரசாங்கத்தார் சென்னை யரசாங்கத்தாரிடமிருந்து வருஷமொன்றுக்கு ௪ லட்சம் ரூபாய் கேட்டிருக்கிறார்களென்றும் துவக்கத்தில் ஆறு வருஷங்களுக்கு இவ்வாறு சப்ளை செய்யப்படுமென்றும் கூறப்படுகிறது.

ஃ ஃ

பாஞ்சாலச்சட்டசபையில், நீதிபரிபாலன அதிகாரத்தை நிர்வாகிகளினிடமிருந்து பிரிக்க வேண்டுமென்பதை வற்புறுத்தி செலவு மான்ய மொன்றைக் குறைக்க வேண்டுமென ஓர் அங்கத்தவர் கொண்டு வந்த பிரேரணை, அரசாங்கத்தாரால் பலமாக எதிர்க்கப்பட்டும் பெரும்பாலோரால் நிறைவேற்றப்பட்டது.

ஃ ஃ

கல்கத்தா விட்டி காலேஜில் ஏற்பட்டிருந்த மாணவர்களது வேலைநிறுத்தம் இன்னும் தீரவில்லை, சில மாணவர்கள் மட்டுமே வகுப்புக்களுக்குச் செல்லுகின்றனர். ஹிந்து மதப் பிரார்த்தனை நடத்துவதற்கென தனி ஹாஸ்டல் ஒன்றை ஏற்படுத்துவதாக அதிகாரிகள் கூறியதை மாணவர்கள் ஏற்றுக் கொள்ளவில்லை.

ஃ ஃ

இந்தூர் மாஜி மகாராஜா அங்கிருந்து ௪0 மைல் தூரமுள்ள பர்வஹா மாளிகைக்குச் சென்று விட்டார். அங்குதான் அவருக்கும் மிஸ்மில்லருக்கும் கலியாணம் நடக்கப்போகிறதாம். கலியாணத்திற்கென தனி ரயில் வண்டிகள் ஓடுமெனவும், ௫0 ஆயிரம் பேர்கள்வரை விருந்துக்கு வருவார்களென்றும் மணச்சடங்குகள் படக்காட்சிக்கு எடுக்கப்பட்டு அமெரிக்காவிற்கு அனுப்பப்படுமென்றும் செய்தி யெட்டுகிறது.

பம்பாய் மாகாணத்தைச் சேர்ந்த ஓர் உதவிக் கலெக்டர் முகாமிலிருக்கையில் அவரிடமிருந்த ரூபா ௧௬-ஆயிரத்தை யாரோ களவாடிக்கொண்டனராம்.

ஃ ஃ

சில தினங்கள் முன் எல்லூரில் பெரிய கோர தீ விபத்தேற்பட்டு அதன் பயனாக ௩000 குடும்பங்கள் வீடு வாசல்களின்றித் தவிக்கின்றனராம்.

ஃ ஃ

கல்கத்தாவில் சில தினங்களாக ஏற்பட்டிருந்த தோட்டிகளின் வேலை நிறுத்தம் தீர்ந்துவிட்டது. வேலை நிறுத்தகாலத்திற்குச் சம்பளம் பிடிக்கப்படமாட்டாதாம்.

ஃ ஃ

பர்மா சட்டசபையங்கத்தவரான திரு நாராயண ராவின் மீது துறைமுக டிராபிக் மானேஜர் தொடுத்திருந்த அவதூறு வழக்கில் எதிரியின் மீது குற்றப் பத்திரிகை படிக்கப்பட்டு விட்டது.

ஃ ஃ

வங்காளத்தில் வில்டா வண்டியில் தபாலிருந்து ௫0000 இன்ஷ்யூர் கவர்களடங்கிய பை களவு போய்விட்டது. இது சம்பந்தமாக மூவர் கைது செய்யப்பட்டு அவர்களிடமிருந்து ரூ ௨௫00 கைப்பற்றப்பட்டிருக்கிறது.

ஃ ஃ

திருவாங்கூரைச் சேர்ந்த திருப்பரப்பு எனும் ஒரு மலைக்கிராமத்தில் சிலதினங்கள் முன் ௭0 திருடர்கள் கத்தி வாள், முதலிய ஆயுதங்களோடு புகுந்து ஓர் வீட்டைச் சூழ்ந்து கொள்ளை யடித்தனர். இவர்களுள் ௧௬ பேர் கைது செய்யப் பட்டிருக்கின்றனராம்.

ஃ ஃ

இந்தியாவில் தற்பொழுது சுற்றுப்பிரயாணம் செய்து வரும் இங்கிலாந்து தொழிற் கட்சியைச் சேர்ந்த பார்லிமெண்டு அங்கத்தவரான மிஸ்டர் தர்ட்டிலும் அவரது மனைவியாரும் சில தினங்கள் முன் மகாத்மாவைச் சென்று பார்த்து அவருடன் சம்பாஷித்துக் கொண்டிருந்தாராம்.

ஃ ஃ

பாரிஸாலிலுள்ள அரசாங்கப் பள்ளிக்கூடத்தைச் சேர்ந்த இரு மாணவர்கள் ஹர்த்தால் தினத்தன்று மறியல் வேலை செய்ததற்காக ௬ மாத காலத்திற்குப் பள்ளியினின்றும் நீக்கப்பட்டிருக்கின்றனர். அன்று பள்ளிக்கூடத்திற்கு வாராத மாணவர்களுக்கு ஒருமாதச் சம்பளம் அபராதம் விதிக்கப் பட்டிருக்கிறது.

ஃ ஃ

இளமை மணத்தடை மசோதாவைப் பற்றிப் பரிசீலனைசெய்து அறிவிக்குமாறு நியமிக்கப்பட்ட கமிட்டியார், எல்லா ஜாதியினரையும் இம்மசோதாவின் ஆதிக்கத்திற்குள் கொண்டுவர வேண்டுமென்றும், மசோதாவில் கூறப்பட்டிருப்பதை மீறிக் கலியாணம் நடத்தப்பட்டால் அக்கலியாணம் செல்லுபடியற்றதென்று அறிவிக்கப்பட வேண்டுமென்றிருப்பதை மாற்றி அபராதமும் சிறைவாசத் தண்டனையும் விதிக்க வேண்டுமென்றும் சிபார்சுகள் செய்திருப்பதாகக் கூறப்படுகிறது.

## நோட்டீஸ்.

சிவகெங்கை டி. மு. கோர்ட்டு.

1928-ம் ௵ S. C. No. 19.

காதர் பாச்சா ருவுத்தர் ... வாதி.

கருப்பையா ... பிரதிவாதி.

ஷை வாதி ஷை பிரதிவாதிபேரில் வியாஜ்யம் செய்து விசாரித்து தீர்ப்புச் செய்வதற்காக ௨6—3—28-ல் வாய்தா ஏற்பட்டிருக்கிறது. ஏதேனும் ஆட்சேபனையுண்டானுல் ஷை தேதியில் முற்பகல் 11 மணிக்கு ஆஜராகித் தெரியப்படுத்திக் கொள்ள வேண்டியது. தவறினுல் ஒருதரப்பாகத் தீர்ப்புச் செய்யப்படும்.

P. SANKARA IYER,

சிவகெங்கை வாதி வக்கீல்.

13—3—28

## உள்ளூர்செய்தி.

| | |
|---|---|
| சென்னை உண்டியல் வட்டம். | 0—௧—0 |
| இரங்கூன் உண்டியல் வட்டம், | ௧—௪—0 |
| பவுன் விலை. | ௧௧—௩—0 |

ஆயுர்வேத வைத்திய சாலை:—இவ்வூர் எம். எஸ். எஸ். பி. சுப்பிரமணியன்செட்டியாரவர்களது தர்ம ஆயுர்வேத வைத்தியசாலையில் பிப்ரவரி மாதத்தில் மொத்தம் ௪௨௩௩-பேர்கள் சிகிச்சை பெற்றிருக்கின்றன ரென்றும், அதில் பழைய நோயாளிகளின் எண்ணிக்கை ௨௬௮0 என்றும், புதிதாக வந்த நோயாளிகள் ௧௨௫௩ என்றும் அறிவிக்கப்படுகிறது.

ஹிந்து மதாபிமான சங்கம்:—இச் சங்கத்தின் சார்பில் ஓர் பொதுக் கூட்டம் சென்ற ஞாயிற்றுக் கிழமை இரவு ௬-௩0-க்கு திருவாளர் ஆவி. லெ. அருணசலன் செட்டியாரவர்கள் தலைமையில் நடைபெற்றது. அத்தருணம் திருவாளர்களான தி. ம. நடராஜன் அவர்களும், பழ. நாராயணன்செட்டியாரவர்களும் முறையே "நமது முன்னேற்றம்," "தமிழர்கடமை" எனும் பொருள் பற்றிப் பேசினார்கள்.

சென்ற சனிக்கிழமை இரவு ௬-மணிக்கு மேற்படி சங்கச் சார்பில் இராமகிருஷ்ண பரமஹம்சர் பிறந்ததினக் கொண்டாட்டம நடைபெற்றது. அத்தருணம தேவகோட்டை அடிஷனல டிஸ்டிரிக்ட் முனிசிப், திருவாளர் கோமதிநாயகம் பிள்ளையவர்கள் பி. ஏ., பி. எல். தலைமை வகித்தார்கள்.

முதலாவதாக, சிராவயல் சரஸ்வதி பாடசாலை ஆசிரியர் திருவாளர் ஜீவானந்தன் அவர "இராமகிருஷ்ணதேவர் வாழ்க்கை" எனும் பொருள் பற்றி அழகுபடப் பேசினார்கள். பின்னர் திருவாளர் அரு. சோமசுந்தரம் செட்டியாரவர்கள் பெருக்கமுடனும் நகைச் சுவையுடனும "பெரியார் திருவிழா" எனும பொருள் பற்றி ஓர் அரிய சொற்பெருக்கு நிகழ்த்தினர். அவர் சொறபொழிவினிடையே பெரியார் திருவிழாக்கள் நடாத்த வேண்டுவது மிக அவசியமென்றும், ஆனால் அது வெறும சோற்றுத் திருவிழாவாகவும், சோம்பேறிகள் கூட்டத்திருவிழாவாகவும் நிகழ்த்திடலாகாதென்றும், அழகுபெற மொழிந்தனர். கடைசியாக, தலைவர்கள் தம் முடிவுரையில் இராமகிருஷ்ண தேவர் போன்ற பெரியார்கள் கொண்டாட்டம் நடாத்தவேண்டுவது மிக அவசியமென்றும், இராமகிருஷ்ண சங்கத்தார் நம் நாட்டிற்குச் செய்துவரும் அரிய தொண்டுகளைப் போல் இங்குள்ள சங்கத்தாரும் செயலாற்றிட முனவருதல் வேண்டுமென்றும், அப்பெரியாரின் சீடராகிய சுவாமி விவேகானந்தர் கூறியவாறு "மேல்நாடுகளில் உண்மை வேதாந்திகள் இருக்கின்றார்களேயன்றி இந்தியாவில் உண்மை வேதாந்திகள் இல்லாது போயினர்" என்றும் பொய்வேடதாரிகளே மலிந்துவிட்டனரென்றும் எடுத்துரைத்து, ராமகிருஷ்ண தேவர் பரவச் செய்துள்ள சமரச சமயக்கொள்கைகளை யாண்டும் பரவச்செய்து அவரடிகளைப் பின்பற்றி வாழ்ந்திட வேண்டுமெனறும் கேட்டார் மன்றில நன்கு பதியுமபடி பேசினார். பின்னர், வகுப்பு வேறுபாடின்றி பொங்கல் வழங்கப்பெற்றதுடன் கூட்டம இனிது நிறைவெய்தியது.

### மூப்பின்.

கௌரவ மாஜிஸ்திரேட்:—இவ்வூரில் மேலைமேலவீதி ....தில் நடந்துவரும சா. ராம. மு. ... கடையின் அதிபர நாச்சியப்பும திரு. ராசப்பப செட்டியாரவர்கள் ஓர் கௌரவ மாஜிஸ்திரேட்டாக நியமிக்கபபட்டிருக்கிறார், என ஒருஅன்பர் அறிவிக்கிறார்.

... திருச்சியிலுள்ள காவிரிப் பாலத்தை ...டித்துப் புதிதாகக் கட்ட ௭ லட்சம் ...பாய்க்கு கண்டிராக்ட் விடப்பட்டிருக் ...றதாம்.

ஃ ஃ

...ராவ்பகதூர் வி. வி. அனந்தகிருஷ் ...ணய்யர் சென்னையரசாங்க அட்வகேட் ...ஜெனரலாகவும், ஸ்ரீமான் வெங்கடரமண ...ராவ் நாயுடுகாரு அரசாங்க பிளீடராகவும் ...யமிக்கப் பட்டிருக்கின்றனர்.

ஃ ஃ

ஜோலார்பேட்டைக்கு அருகாமையி ...லுள்ள நாரசப்பட்டி எனும் கிராமத்தில் ...லை தினங்கள் முன் தீவிபத்தொன்று ஏற் ...பட்டு சுமார் ௨௦௦ வீடுகள் வரை சேத ...மடைந்து ஜனங்கள் பெரும் துன்பமனு ...பவிக்கின்றனராம்.

ஃ ஃ

...ாகபட்டணத்திலுள்ள சேனைத் தலை ...வர் மகாஜன சபையார் அரசியல் கமிஷ ...னுக்கு நல்வரவு கூறுவதாகவும், சட்ட ...சபையில் அச் சமூகத்தாருக்குப் பிரதி ...நிதித்துவம் அளிக்க வேண்டுமென்றும் ...ர் ...ான் ...லமனுக்குத் தந்திச் செய்தியனுப்பி ...ருக்கின்றனர்.

ஃ ஃ

மதுரையிலிருந்து காரைக்குடிக்கு இருப் ...ப் பாதை போடும் விஷயம் முடிந்துவிட் ...டதென்றும், திருச்சிருப்பள்ளி, புதுக் ...கோட்டை ...லயனும், மதுரை போடிநாய்க்க ...னூர் லயனும் போடப்பட்டபிறகு ௧௯௩௦-ம் ஆண்டில் இவ்விருப்புப் பாதை வேலை துவங்கப்படுமென்றும் சொல்லப்படுகிறது.



# தமிழகம்.

மைசூரில் வைசூரி நோய் இன்னும் கடுமையாகப் பரவிவருகிறதாம். இதன் பயனாக இன்னும் பலவிதமான நோய்கள் தோன்றியிருக்கின்றனவாம்.

ஃ ஃ

தென்னிந்திய ரெயில்வே டிப்டி ஏஜண்டு பதவிக்கு வரவு செலவு கமிட்டியின் நிபந்தனைக்கு மாருக ஓர் ஐரோப்பியரே இப்பொழுது நியமிக்கப் பட்டிருக்கிறார்.

ஃ ஃ

தங்களது எல்லைக்குட்பட்ட புளியங்குடி, சங்கரன் கோவில், கயத்தார் முதலிய கிராமங்களில் பெண்பாடசாலைகள் வைத்து நடத்துவதென கோவில்பட்டித் தாலூகா போர்டுசபையார் தீர்மானித்திருக்கின்றனர்.

ஃ ஃ

பர்மா ஆயில் கம்பெனியும் ஏஷியாடிக் பெட்ரோலியம் கம்பெனியும் ஒன்ருக இணைக்கப்பட்டதன் பயனாக சென்னையில் அக்கம்பெனிகளில் தகர வேலையிலிருந்த ௧௨௦ பேர் வேலையினின்றும் நீக்கப்பட்டிருக்கின்றனர்.

ஃ ஃ

நாளிது மார்ச்சுமாதம் முதல் தேதி தூத்துக்குடியில் திருநெல்வேலி ஜில்லாக் கலெக்டரால் முத்துச் சலாபம் திறந்து வைக்கப்பட்டதாம். கடந்த சலாப வருமானம் அதிகமாயிருந்ததை முன்னிட்டு சுமார் ௫௦௦ அரபிய வியாபாரிகள் வந்திருக்கின்றனராம்.

ஃ ஃ

சேலத்தில் பசுப் பாதுகாப்பு நிலையமொன்று சில அன்பர்களின் முயற்சியால் ஏற்படுத்தப் பட்டிருக்கின்றது. ௨௦-பசுக்கள் இருந்துவருகின்றன. காலையிலும் மாலையிலும் ஏழைக் குழந்தைகளுக்கும் நோயாளிகளுக்கும் குறைந்த விலைக்குப் பால் கொடுக்கப்பட்டு வருகின்றது. ரூ. ௧௦௦௦ பெறுமான கட்டிட மொன்று விலைக்கு வாங்கப்பட்டிருக்கிறது.

சில தினங்கள் முன் கும்பகோணம் ரயில் ஸ்டேஷனில் சுமார் ௧௬ வயதுள்ள ஓர் வாலிபன் ரயில் வண்டியால் மோதுண்டு உயிர் துறந்தான்.

ஃ ஃ

சென்னைச் சர்வகலாசாலையின் ஆதரவில் வங்காளத்தைச் சேர்ந்த பிரபல சரித்திராசிரியரான ஆசிரியர் ஜாதுநாத் சர்க்கார் இந்திய சரித்திர சம்பந்தமான சொற்பொழிவுகள் நிகழ்த்திவருகின்றார்.

ஃ ஃ

சில தினங்கள் முன்னர் சென்னை நேப்பியர் பாலத்திற் கருகில் ௧௨ வயதுள்ள ஓர் வாலிபன் நினைவற்று மண்டை நொறுங்கிக் கிடந்தான். ஆஸ்பத்திரிக்குக் கொண்டு போகப் பட்டதும் உயிர் துறந்தான்.

ஃ ஃ

அகில இந்திய பிரம்மஞான வாலிபச் சங்கத்தார் ஈஸ்டர் விடுமுறை நாட்களில் அடையாற்றில் இந்தியரது வீட்டு வசதிகளைக் காட்டும் பொருட் காட்சியொன்று நடத்த உத்தேசித் திருக்கின்றனர்.

ஃ ஃ

இருவாரங்களுக்கு ஒரு முறை பிரயாணிகளின் சௌகரியத்தை முன்னிட்டு நீலகிரி எக்ஸ்பிரஸ் புருமவுண்டன் எக்ஸ்பிரஸ் எனும் பெயருடன் சென்னையிலிருந்து ஒரு ஸ்பெஷல் ரயில் விடுவதென்று முடிவு செய்யப்பட்டிருக்கிறதாம்.

ஃ ஃ

சென்னை யரசாங்க முதன் மந்திரி டாக்டர் சுப்பராயன் சட்டசபைத் தீர்மானத்திற்கு விரோதமாக சைமன் கமிஷன் விஷயத்தில் நடந்துகொண்டதைக் கண்டிக்கும் முறையில் அவரது சம்பளத்தைச் செலவு தொகையிலிருந்து நீக்குவதாகத் தான் ஓர் தீர்மானங்கொண்டு வரப்போவதாக சுயராஜ்யக் கட்சியைச் சேர்ந்த ஜனுப் அப்துல் ஹமீத் கான் அறிவித்திருக்கிறாராம்.

சைமன் கமிஷன் பகிஷ்காரத்தில் கலந்து மதுரை அமெரிக்கன் கல்லூரியைச் சேர்ந்த அ மாணவர்கள் கருப்புக்கொடி தாங்கி சைமனே 'திரும்பப்போ' வெனக் கூவியதாக அவர்கள் ஒவ்வொருவருக்கும் ரூ. ௯ அபராதம் விதிக்கப் பட்டிருப்பதாகவும் ஒருவன் பள்ளியினின்றும் நீக்கப்பட்டிருப்பதாகவும் கூறப்படுகிறது.

ஃ ஃ

தஞ்சாவூர் கலெக்டர் மிஸ்டர் பிரௌன் வேற்றூருக்கு மாற்றப்பட்டிருப்பதால் அவருக்கு ராவ்பகதூர் எஸ். ஏ. எஸ். ஆர். எம். ராமநாதன் செட்டியார், ஏ. டி. பன்னீர் செல்வம், டாக்டர் சையதுதாஜுடீன் ஆதியோர்கள் சேர்ந்து சென்ற திங்கட்கிழமை மாலை ஜில்லாபோர்டு மண்டபத்தில் சிற்றுண்டி விருந்தொன்று நடத்திவைத்தனர். விருந்திற்குப் பின் சங்கீதக் கச்சேரி நடந்தது.

ஃ ஃ

அண்மையில் நடைபெற்ற தஞ்சை ஸ்திரீகளின் கூட்ட மொன்றில், பெண்களுக்கு ௧௬ வயதுக்கு முன்னும் ஆண்களுக்கு ௨௧ வயதுக்கு முன்னும் மணம் செய்வதைத் தடுக்கச்சட்டம் செய்யும்மாறு அரசினரை வேண்டிக்கொள்ளுவதாக ஓர் தீர்மானம் நிறைவேற்றப்பட்டிருக்கிறது. இது போலவே தமிழகத்திலுள்ள முக்கியமான ஊர்களிலெல்லாம் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டிருக்கின்றன.

—

'குமரன்' அச்சுக்கூடத்தில் அச்சியற்றிப் பிரசுரிக்கப்பெற்றது.

